


# குறள் வழி

திருக்குறள் முற்றோதல் மாத மின்னிதழ்

திருவள்ளுவராண்டு 2054 அக்டோபர்(புரட்டாசி) - 2023 மலர்: 1 இதழ்: 1



## மாணவர்களுக்கு இலவசத் திருக்குறள் நூல்களை வழங்கி, முற்றோதல் பயிற்சியைப் பள்ளிக் கல்வித்துறை அமைச்சர் தொடங்கி வைத்தார்



திருக்குறள் முற்றோதல்
பயிற்சி தொடக்க விழா

உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம் சார்பில்
தஞ்சை மாவட்ட அரசு பள்ளிகளுக்கு திருக்குறள் புத்தகம் வழங்கல்

# குறள் வழி

திருக்குறள் முற்றோதல் இயக்கத்தின் செய்திகளை, செயல்பாடுகளை, நிகழ்ச்சிகளை தொகுத்து மாதம் ஒருமுறை குழுவினருக்கு பகிரும் இணைய இதழ்.

## ஆசிரியர் குழு

### ஆசிரியர் குழு

*அஜய்குமார் செல்வன், சென்னை*

*மேகா சக்தி பாரதி, கோவை*

*வி.ஹேமா, திருச்சி*

### ஒருங்கிணைப்புக் குழு

*வலைத்தமிழ் ச.பார்த்தசாரதி*

*சி.இராஜேந்திரன், IRS (ஓய்வு)*

*இரவி சொக்கலிங்கம்*

**உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம்**

www.Thirukkural.ValaiTamil.com

அரசுப் பள்ளி மாணவர்களுக்கு 1330 திருக்குறள் இலவச மனனப் பயிற்சி

(வெற்றிகரமாக முடிக்கும் மாணவர்களுக்குப் பயிற்சி சான்றிதழும், அரசின் முற்றோதல் திட்டத்தில் பங்கேற்க வாய்ப்பும்)

**மாவட்டப் பயிற்சியாளர்கள்**

செங்கல்பட்டு — திருமதி. பி. கற்பகவள்ளி — +91 99525 73398

அரியலூர், புதுச்சேரி — திருமதி. சங்கீதா கண்ணன் — +91 78718 39331

திண்டுக்கல் — திரு. வெ.செல்வன் — +91 97884 25501

தஞ்சை — திருமதி. ச. ஆனந்தி — +91 96008 90134

**தலைமைப் பயிற்சியாளர்கள்**

கவிஞர் தமிழ்க்குழவி — +91 99385 11065

திருக்குறள் தூயர் திரு. அ. கோபி சிங் — +91 88385 11065

திருக்குறள் திரு. க. காமராசு — +91 63802 78863

திருக்குறள் நினைவாற்றலர் த. தமிழ் மகிழ்நன் — +91 92802 53329

திரு. க. கோ. பழனி — +91 98944 59052

**அனைத்து மாவட்டங்களுக்கும் மாவட்டப் பயிற்சியாளர்கள் விரைவில் நியமிக்கப்படுவர்.**

**தேவை:** மாவட்ட அளவில் திருக்குறள் முற்றோதல் பயிற்றுவிக்க ஆர்வமும், அனுபவமும் உள்ள பயிற்சியாளர்கள், புரவலர்கள்.

**மாவட்டத்திற்கு 2000 திருக்குறள் நூல்கள் வீதம் ஆண்டுக்கு 80000 திருக்குறள் நூல்களை அடுத்த ஐந்து ஆண்டுகளுக்கு இலவசமாக வழங்குவோர்: உலகத் தமிழ் வளர்ச்சி மன்றம், USA**

**ஒருங்கிணைப்பாளர்கள்**

திட்ட ஒருங்கிணைப்பு — திரு. ச. பார்த்தசாரதி

அரசு மற்றும் பயிற்றுநர் ஒருங்கிணைப்பு — திரு. சி. இராஜேந்திரன், IRS

அரசுப் பள்ளிகள் ஒருங்கிணைப்பு — திரு. இரவி சொக்கலிங்கம், S2S அறக்கட்டளை

புரவலர் ஒருங்கிணைப்பு — திரு. கொழந்தவேல் இராமசாமி, Washington DC, USA; திரு. க.செங்குட்டுவன், இந்தியா; திரு. செந்தில் துரைசாமி, Texas, USA

**பயிற்சி விவரங்களுக்கு**

E-Mail: kural.mutrothal@gmail.com

Web: https://Thirukkural.ValaiTamil.com

Whatsapp: +917358644673

# ஆசிரியர் பக்கம்

தமிழ் உறவுகளுக்கு அன்பான வணக்கம்,

வலைத்தமிழ், வள்ளுவர் குரல் குடும்பம், Service 2 Society தன்னார்வக் குழுவினர் இணைந்து நடத்தும் திருக்குறள் முற்றோதல் இயக்கத்தின் மாதாந்திர செய்தி இதழாக "குறள் வழி" மின்னிதழ் தொடங்கப்பட்டு முதல் இதழ் வழியே உங்களுடன் உரையாடுவதில் மட்டற்ற மகிழ்ச்சியடைகிறேன். உலகெங்கும் இன்றுள்ள அமைதியற்ற சூழலுக்கு மிகப்பெரிய தீர்வாகத் திருக்குறள் விளங்குகிறது. இதைக் கொண்டாடுவதோடு நின்றுவிடாமல், நாம் கசடற கற்று, வாழ்வில் நிற்பதன் வழியே உலகிற்கு ஒரு முன்னுதாரணமான சமூகமாக தமிழ்ச்சமூகம் விளங்கமுடியும். உலகத்தின் பழமையான, பயன்பாட்டில் உள்ள மொழியாகவும், அதில் இருக்கும் திருக்குறள் என்ற அறிவுச் சொத்து மனிதகுலத்திற்கான வாழ்வியல் வழிகாட்டியாகவும் விளங்கும் பெருமையை பெற்றவர்கள் நாம். நமக்கு மிகுந்த பொறுப்பும், கடமையும் உள்ளது. திருக்குறளை பெற்றுள்ள நாம் வாழ்வின் எந்த நிலையில் இருந்தாலும் அதை குடும்பத்தோடு அமர்ந்து கற்கவேண்டும், உள்வாங்கவேண்டும், உணரவேண்டும், வாழ்வில் நெறியாகக் கடைபிடிக்கவேண்டும்.

திருக்குறள் பரவலாக்கத்திற்கு, பல்வேறு அமைப்புகளைக் கட்டி, செயல்பாடுகளை முன்னெடுத்த நம் முன்னோர்களின் வழியில், அவர்களை வணங்கி, நம் அறக்கடமையாக நாமும் கற்று பயனடைந்து, நம் அடுத்த தலைமுறைக்கு இதைக் கையளிக்கவேண்டியது நம் கடமையாக உள்ளது. அதைப் பொறுப்புடன் முன்னெடுத்து மாணவர்களுக்குத் திருக்குறள் முற்றோதல் பயிற்சியை எட்டாம் வகுப்பிற்குள் இளநிலையாக முடிக்கவைப்பதும், கல்லூரி முடிப்பதற்குள் வாழ்வியல் நெறியாக உள்வாங்கி பொருள் உணர்ந்து கற்றுத்தேர்ந்து, நேர்முகத் தேர்வை மாவட்ட திருக்குறள் திருக்குறள் ஆவலர்களின் முன்னிலையில் முதுநிலையை முடித்து திருக்குறளைக் கைக்கொள்ள வைப்பதும் உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கத்தின் முதன்மை நோக்கமாகும்.

கூடி வாழ்ந்தால் கோடி நன்மை என்பதை உணர்ந்து ஒவ்வொரு மாவட்டத்திலும் இயங்கும் திருக்குறள் அமைப்புகள், மன்றங்கள், ஆர்வலர்கள், அறிஞர்கள் என்று அனைவரிடமும் கைகோர்த்து, அவர்களின் தனித்தன்மை, அடையாளம் போற்றி, அந்தந்த மாவட்டத்தில் திருக்குறள் பரவலாக்கல் மாணவர்களிடம் சென்றுசேர திட்டமிடுகிறோம். ஒவ்வொரு மாவட்டத்திலும் தங்கள் தமிழ் உணர்வையும், திருக்குறள் அனுபவத்தையும், நேரத்தையும் வழங்கும் திருக்குறள் ஆளுமைகளான நம் மாவட்டப் பொறுப்பாளர்கள், முற்றோதல் தலைமைப் பயிற்சியாளர்கள், மாவட்டப் பயிற்சியாளர்கள், திருக்குறள் புரவலர்கள் அனைவரும் போற்றத்தக்கவர்கள். அவர்கள் செய்யும் இந்த அர்ப்பணிப்பு அவர்களுக்கு உரிய ஏற்றத்தையும், மகிழ்ச்சியையும், நிறைவையும் அள்ளிக் கொடுக்க இறையருளை வேண்டுகிறேன்.

ஹார்வர்டு புரவலர் மருத்துவர் விஜய் ஜானகிராமன் அவர்களை சந்தித்தபோது, நாங்கள் உலகத் தமிழ் வளர்ச்சி மன்றம் மூலம் ஒரு மாவட்டத்திற்கு 2000 திருக்குறள் நூல்கள் வீதம் ஆண்டுக்கு 80000 திருக்குறள் நூல்களை வழங்க விரும்புகிறோம் என்று தெரிவித்தார். திருக்குறள் முற்றோதல் பயிற்சியை மட்டுமே திட்டமிட்டிருந்த எங்களுக்கு இவ்வளவு நூல்களை சரியானவர்களுக்கு கொண்டுசேர்ப்பதில் உள்ள சவால்களை எண்ணி சிறு தயக்கம் இருந்தது. இருப்பினும் ஏற்றுக்கொண்டோம். இதற்கு நேர்த்தியாக ஒருங்கிணைப்பு செய்த மருத்துவர் ஜானகிராமன் மற்றும் அவரைச் சார்ந்த புரவலர்களுக்கும், அவர் சார்பாக நூல்களை அச்சடித்து வழங்கும் வானதி பதிப்பகத்தாருக்கும் மனமார்ந்த நன்றியை குழுவின் சார்பாக தெரிவித்துக்கொள்கிறேன்.

சென்னையில் மாண்புமிகு கல்வி அமைச்சரைக்கொண்டு தொடங்கப்பட்ட இந்தப் பயணம், இன்று தமிழ்நாட்டின் 38 மாவட்டங்கள், புதுச்சேரி உள்ளிட்ட 40 இடங்களில் 40000 திருக்குறள் நூல்கள் அனுப்பப்பட்டு, அனைத்து இடங்களிலும் திருக்குறள் ஆர்வலர்கள் பொறுப்பேற்று மாவட்ட நிர்வாகத்துடன் இணைந்து அரசுப்பள்ளி தலைமையாசிரியர்களுக்கு நூல்களை வழங்கி வருகிறார்கள்.விரைவில் அனைத்து மாவட்டத்திலும் முதல்கட்ட 1000 நூல்கள் வழங்கப்பட்டு, அடுத்தகட்டமாக மேலும் 1000 நூல்கள் அனுப்ப திட்டமிட்டுள்ளோம். நூல்கள் பெற்ற பள்ளிகளில் ஆர்வமுள்ள மாணவர்களுக்கு இலவச திருக்குறள் முற்றோதல் பயிற்சியை இணைய வழியிலும், நேரடியாகவும் வழங்கத் தொடங்கிவிட்டோம்.

சமீபத்தில் தஞ்சை தமிழ்ப்பல்கலைக்கழகத்தில் நடந்த மாநாட்டில் மாண்புமிகு தமிழ் வளர்ச்சித்துறை அமைச்சர் அவர்கள் திருக்குறள் முற்றோதல் குறித்து குறிப்பிடும்போது, அரசு நிதி ஒதுக்கி பரிசுத்தொகையை ரூபாய் பத்தாயிரத்திலிருந்து பதினைந்தாயிரமாக உயர்த்தியுள்ளது. மேலும் ஆண்டுக்கு 70 பேர் மட்டுமே பரிசுபெறமுடியும் என்ற கட்டுப்பாட்டை நீக்கி அனைத்து முற்றோதல் முடித்தவர்களுக்கும் பரிசு என்று அறிவித்துவிட்டது. ஆனால், பல மாவட்டங்கள் திருக்குறள் முற்றோதல் போட்டியில் கலந்துகொள்ள முன்வரவில்லை. இதை தன்னார்வ திருக்குறள் அமைப்புகள் முன்னெடுத்து விழிப்புணர்வை ஏற்படுத்தி அதிக மாணவர்கள் இதை பயன்படுத்திக்கொள்ள பங்காற்றவேண்டும் என்று கேட்டுக்கொண்டார். உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம் அனைவருக்குமான இலவசப் பயிற்சி இயக்கம். இதை முழுமையாக அனைவரும் பயன்படுத்திக்கொள்ளவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். இது நமது இயக்கம். நம் எதிர்கால சந்ததிக்கு திருக்குறளை முறையாகக் கொண்டுசெல்லும் அமைப்பு.

தமிழ்நாட்டைத் தொடர்ந்து, அமெரிக்கா, கனடா உள்ளிட்ட நாடுகளுக்கு பயிற்சியளிக்க விரைவில் தொடக்கவிழா நடைபெறவிருக்கிறது. மேலும் தமிழ்நாட்டு அரசுப்பள்ளிகளில் நூல்களைப் பெற்ற மாணவர்களுக்கு இணையவழியில் பயிற்சி வழங்கும் தொடக்கவிழாவும் நடைபெறவிருக்கிறது. ஆர்வமுள்ள உலகத் தமிழர்கள் தங்கள் குழந்தைகளுக்கு திருக்குறள் முற்றோதல் பயிற்சி வழங்க முன்வரவேண்டும் என்று குழுவின் சார்பாக கேட்டுக்கொள்கிறேன். தமிழ்நாட்டின் ஒவ்வொரு மாவட்டத்திற்கும் ஒரு திருக்குறள் முற்றோதல் பயிற்சியாளரை அடையாளம் காணவும், அந்தந்த மாவட்டத்தின் மண்ணின் மைந்தர்களை புரவலராக அடையாளம் கண்டு இதன் சேவை தொய்வில்லாமல் தற்சார்பு அடைய உங்கள் அனைவரின் ஒத்துழைப்பும், ஆலோசனையும், வழிகாட்டுதலும், பங்களிப்பும் தேவை. வாருங்கள் இந்த தொலைநோக்கு முயற்சியில் அனைவரும் துணைநிற்க அழைக்கிறோம். தொடர்ந்து பயணிப்போம். வாழ்த்துகள்.. நன்றி..

திட்ட ஒருங்கிணைப்பாளர், *வலைத்தமிழ் ச.பார்த்தசாரதி*




# உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம்

உலகப் பொதுமுறையாம் திருக்குறளை இளம் வயதிலேயே மாணவ மாணவியர் மனப்பாடம் செய்தால் வாழ்நாள் முழுவதும் மனத்தில் நிற்கும். "இளமையில் கல்வி பசுமரத்தாணி" என்பது பழமொழி.

திருக்குறள் மனித இனத்தின், குறிப்பாக தமிழர்களின் மாபெரும் பொதுவுடைமைச் சொத்து. திருக்குறள் நெறிகள் பரவப்பரவ, அறம் பரவும். தமிழ் மொழிப்பயிற்சியும், மாணவர்களுக்குக் கிடைக்கும். அறமும், மொழியும் வளரும். மேலும் அறமும், திறனும், ஒருங்கே வாய்ந்த இளைஞர் சமுதாயம் உருவாகிட வலுவான அடித்தளமாக திருக்குறள் மனனம் அமையும். சமுதாயத்தில் நல்லிணக்கமும், மனித நேயமும் வளரும்.

திருக்குறள் பொருள் பொதிந்த, பொருள் நிறைந்த, இகலில்லா இன்ப வாழ்க்கையின் கையேடு. கிட்டத்தட்ட 20 ஆண்டுகளுக்கும் மேலாக, 1330 திருக்குறளையும் மனப்பாடம் செய்து ஒப்பிக்கும் மாணவ மாணவியரை ஊக்குவிக்கும் வகையில் தமிழக அரசு சான்றிதழ் மற்றும் பரிசுத் தொகை வழங்கி வருகிறது. திருக்குறள் முற்றோதல் செய்யும் 70 மாணவர்களுக்கு, 2021 ஆம் வருடம் வரை, தலா ரூ.10000/- திருவள்ளுவர் தினத்தன்று அரசு வழங்கி வந்தது.

இந்த சூழ்நிலையில் தமிழக அரசு 2022 ஆம் ஆண்டு சட்டசபையில் 70 மாணவர்கள் என்ற உச்சவரம்பை நீக்கியது.பரிசுத்தொகையும் உயர்த்தப்படும் என்று மாண்புமிகு தமிழ் வளர்ச்சித் துறை அமைச்சர் சட்டசபையில் அறிவித்தார்.{தமிழ் வளர்ச்சி மற்றும் செய்தித் துறை. தமிழ் வளர்ச்சி மானியக் கோரிக்கை - 46 அறிவிப்புகள் (2021-2022)}. கடந்த 20 ஆண்டுகளுக்கும் மேலாக இதுவரை ஆண்டுதோறும் பரிசு பெறும் மாணவர்களின் வயதைப் பார்த்தால் 95 விழுக்காடு மாணவ/மாணவியர் 14 வயதுக்குட்பட்டே இருக்கிறார்கள். ஆறு/ஏழாம் வகுப்புக்குள் மனனம் செய்துவிட்டால், பிறகு மேல் வகுப்புகளில் பொருளுணர்ந்து படிக்க ஏதுவாக இருக்கும். தனிவாழ்வில் நிறைவான வாழ்க்கை வாழவும், சமுதாய பிரச்சனைகளை திருக்குறள் துணையுடன் எதிர் கொள்ளவும், இளவயதிலேயே 1330 அருங்குறள் மனனம் பயனுள்ளதாக இருக்கும்.

இந்தப் பின்புலத்தில், வலைத்தமிழ், வள்ளுவர் குரல் குடும்பம், சர்வீஸ் டு சொசைட்டி என்ற மூன்று அமைப்புகளும் இணைந்து, தமிழ்நாடு, புதுச்சேரியில் ஏற்கனவே திருக்குறள் முற்றோதல் பயிற்சியளிக்கும் ஆசிரியர்களை ஒருங்கிணைத்து, ஒவ்வொரு மாவட்டத்திற்கும் ஒரு ஒருங்கிணைப்பாளர், ஒரு பயிற்சியாளர், ஒரு புரவலர் அடையாளம் கண்டு அக்டோபர் 2021ல் தொடங்கப்பட்டது இவ்வியக்கம். எம்முடன் உலகத் தமிழ்வளர்ச்சி மன்றம், USA இணைந்து ஒரு மாவட்டத்திற்கு 2000 திருக்குறள் நூல்கள் வீதம் ஒரு ஆண்டுக்கு 80,000 திருக்குறள் நூல்களையும், ஐந்து ஆண்டுகளுக்கு மொத்தம் 4 லட்சம் நூல்களையும் அரசுப்பள்ளி மாணவர்களுக்கு இலவசமாக வழங்க முன்வந்தது.

**உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கத்தின் குறிக்கோள்கள்:**

1. தமிழ்நாடு அரசின் புதிய அறிவிப்பைத் தொடர்ந்து, 1330 திருக்குறளையும் மனனம் செய்யும் மாணவர்களை அதிக அளவில் உருவாக்கி, அறம் சார்ந்த, பொருள் வளம்மிக்க நல்லிணக்க சமுதாயத்தைக் கட்டமைத்தல்.
2. பள்ளித் தலைமை ஆசிரியர்கள்/ஆசிரியர்கள், பெற்றோர்களுடன் இணைந்து செயல்பட்டு ஆர்வமும் மனனம் செய்யும் திறனும் மிக்க மாணவர்களை இனம் கண்டு, அவர்களுக்குத் திருக்குறள் முற்றோதல் மனனப் பயிற்சியை 9-ஆம் வகுப்புக்குள் அளித்தல். அவர்களுக்கு அரசு சான்றிதழ் மட்டுமின்றி உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கத்தின் "திருக்குறள் முற்றோதல்-இளநிலை" சான்றிதழ் வழங்கப்படும்.
3. வயதுக்கு ஏற்ப, திருக்குறளின் பொருளை முற்றோதல் முடித்த அனைவரும் கல்லூரி செல்வதற்கு முன்பு முழுமையாக அறிந்துகொள்ள வழிசெய்தல். அதில் நேர்முகத் தேர்வு வைத்து பொருள் உணர்ந்து படித்துள்ளவர்களுக்கு "திருக்குறள் முற்றோதல்-முதுநிலை" சான்றிதழ் வழங்கப்படும்.
4. திருக்குறள் முற்றோதல் பயிற்றுவிக்க தமிழ்நாட்டின் அனைத்து மாவட்டங்களிலும் தகுதியானஅனுபவமும் ஆர்வமும் மிக்க முற்றோதல் முடித்த பயிற்சியாளர்களை அடையாளம் கண்டு பயிற்சியாளராகவும், அந்த பயிற்சியாளருக்கு மாதம் ரூபாய் 10000 வழங்க ஒரு புரவலரையும், மாவட்ட ஒருங்கிணைப்பு செய்ய ஒரு ஒருங்கிணைப்பாளரையும் நியமித்தல்.
5. ஒவ்வொரு ஆண்டும் திருவள்ளுவர் நாளில், திருக்குறள் முற்றோதல் முடித்தவர்கள் அனைவரும் அந்தந்த மாவட்டத்தில் உள்ள ஒரு குறிப்பிட்ட திருவள்ளுவர் சிலையின் முன் நின்று முற்றோதல் செய்து கற்றதை மறந்துவிடாமல் தொடர் பயிற்சி செய்தல்.
6. குறள் முற்றோதல் முடித்த அனைவரின் விவரங்களையும் இணையத்தில் பட்டியலிட்டு, வரிசை எண் கொடுத்து அவர்கள் ஒருங்கிணைந்த வளர்ச்சியை, வெற்றியைப் பெற துணைநிற்றல்.
7. குறள் முற்றோதல் முடித்த அனைவரும் ஒருவருக்கொருவர் துணை நின்று கல்வி, வேலைவாய்ப்பு, மகிழ்ச்சியான, நிறைவான வாழ்க்கையை வாழவும், தொழிலில் வெற்றிபெறவும் முன்னுரிமை கொடுத்து அவர்களுக்கு உரிய உதவிகளை ஒட்டு மொத்த உலகத் தமிழர்கள் தங்களது ஒருங்கிணைந்த தலையாய பொறுப்பாக ஏற்று செயல்பட வழிவகுத்தல்.

# நன்றி... நன்றி... நன்றி...





**உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கத்துடன் இணைந்து, தமிழ்நாட்டு அரசுப்பள்ளி மாணவர்களுக்கு இலவசமாக திருக்குறள் நூல்களை வழங்கும் உலகத் தமிழ்வளர்ச்சி மன்ற ஒருங்கிணைப்பாளர் மருத்துவர் விஜய் ஜானகிராமன் அவர்களுக்கும், அவருடன் துணைநிற்கும் அனைத்து புரவலர்களுக்கும் நன்றி.. நன்றி....**

**திருக்குறள் பரப்புரை பயணத்தில் உங்கள் பங்களிப்பு பெரும் பயனை ஏற்படுத்தும்..**

# திருக்குறள் முற்றோதல் பயிற்சி தொடக்க விழா

பள்ளிக் கல்வித்துறை மற்றும் உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம் இணைந்து நடத்தும் பள்ளி மாணவர்களுக்கு திருக்குறள் நூல்கள் வழங்கி முற்றோதல் பயிற்சி தொடக்கவிழா, தி.நகர், சென்னை, ஹோலி ஏஞ்சல் ஆங்கிலோ இந்தியன் மேல்நிலைப்பள்ளியில் இன்று (05.12.2022) காலை 9:30 மணிக்கு நடைபெற்றது.

உலகப் பொதுமறையாம் திருக்குறளை முற்றிலும் மனப்பாடம் செய்யும் வழக்கம் தமிழர்களிடையே பல்லாண்டு காலமாக இருந்து வந்திருக்கிறது. சமுதாயத்தில் அறம் வளர்க்க திருக்குறளைப் போன்ற ஓர் ஒப்புயர்வற்ற நூல் இல்லை.

இதை மனதில் கொண்டு தமிழக அரசு, பள்ளி மாணவர்கள் 1330 திருக்குறளையும் மனப்பாடம் செய்வதை ஊக்குவிக்கும் விதமாக பரிசளித்து வருகிறது. புதிய அரசு பொறுப்பேற்றவுடன் ஆண்டுதோறும் 70 மாணவர்கள் என்ற உச்ச வரம்பை முற்றிலும் நீக்கி, பரிசுத் தொகையையும் உயர்த்துவதாக அறிவித்தது.

அந்த அறிவிப்பின் நீட்சியாக திருக்குறளை மனனம் செய்யும் மாணவர்களை அதிக அளவில் உருவாக்கி, அறம் சார்ந்த சமுதாயத்தை கட்டமைக்க வேண்டும் என்ற எண்ணத்தில், வலைத்தமிழ், வள்ளுவர் குரல் குடும்பம், சர்வீஸ் சொசைட்டி என்ற மூன்று அமைப்புகளும் சேர்ந்து உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கத்தைத் தொடங்கியது.

"உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம்" என்ற தன்னார்வ அமைப்பு மூலம் திருக்குறளை உலகெங்கும் உள்ள மாணவர்களுக்கு தொழில்நுட்ப உதவியுடன் எளிமையாக கொண்டுசெல்லவும், 1330 திருக்குறளையும் முற்றோதல் செய்து ஒப்பிக்கும் மாணவர்களுக்கு தமிழக அரசினால் வழங்கப்படும் ரூபாய் 10,000 மற்றும் அரசின் சான்றிதழை பெறுவதற்கு ஏதுவாகவும், ஆர்வமுள்ள அரசுப்பள்ளி மாணவர்களுக்கு இலவசமாக பயிற்சியளிக்க திருக்குறள் முற்றோதல் மற்றும் திருக்குறள் கவனகம் சார்ந்த பயிற்சியில் அனுபவம் உள்ள, திருக்குறள் முற்றோதல் முடித்த பயிற்சியாளர்களை அடையாளம் கண்டு பயிற்சியளிக்கப்படுகிறது.

இம்முயற்சியில் "உலகத் தமிழ் வளர்ச்சி மன்றம்" என்ற அமைப்பு தமிழ்நாட்டின் ஒவ்வொரு மாவட்டத்திற்கும் 2000 திருக்குறள் நூல்கள் வீதம் சென்னையையும் சேர்த்து ஆண்டுக்கு 80000 (எண்பதாயிரம்) திருக்குறள் நூல்களை அடுத்த ஐந்து ஆண்டுகளுக்கு விலையில்லாமல் வழங்க முன்வந்துள்ளது. திருக்குறள் முனுசாமியார் உரையுடன் கூடிய இந்நூலை உலகத் தமிழ் வளர்ச்சி மன்ற வழிகாட்டுதலுடன் வானதி பதிப்பகம் அச்சிட்டு உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கத்திடம் வழங்குகிறது.

முற்றோதல் முடித்த மாணவர்கள் திருக்குறள் பொருள் உணர்ந்து வாழ்வில் கடைபிடிக்க வழிவகை செய்தலும் இத்திட்டத்தில் அடங்கும்.

"நிற்க அதற்குத் தக" என்ற குறிக்கோளைத் தாங்கி உருவாகியுள்ள "உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம்", ஒரு தன்னார்வ அமைப்பாக, இதுவரை திருக்குறள் முற்றோதல் முடித்தவர்களை இணையத்தில் பட்டியலிட்டு அவர்களின் ஒருங்கிணைந்த வளர்ச்சிக்கு தேவையான வழிகாட்டுதலை, உதவிகளை வழங்க ஏற்பாடு செய்துவருகிறது.

இந்நிகழ்ச்சியில் முதன்மை கல்வி அலுவலர் திரு. சா.மார்ஸ் வரவேற்புரை வழங்கினார். கல்வியாளர் திரு.ராஜராஜன் நிகழ்ச்சியை தொகுத்து வழங்கினார்.

இந்த பின்புலத்தில் திருக்குறள் நூல்களை இவ்வாண்டு, முதல் மாவட்டமாக சென்னைக்கு வழங்கி மாண்புமிகு கல்வியமைச்சர் திரு. அன்பில் மகேஷ் பொய்யாமொழி அவர்கள் 05-12-2022 (திங்கள்கிழமை) அன்று தொடங்கிவைத்து சிறப்புரையாற்றினார்.

## அமைச்சர் உரை

திருக்குறள் முற்றோதல் இயக்கத்தின் முன்னெடுப்பில் வழங்கப்படும் 80000 திருக்குறள் நூல்களை தொடங்கிவைத்து, முற்றோதல் பயிற்சி ஆசிரியர்களை வாழ்த்துவதில் பெருமிதம் அடைகிறேன். இந்த நிகழ்ச்சியில் முக்கியமானவர்கள் மாணவர்கள், அவர்களையும் ஆசிரியர் பெருமக்களையும் பாராட்டுறேன். இந்த இயக்கத்தின் ஒருங்கிணைப்பாளர்கள் திரு.பார்த்தசாரதி, திரு.ராஜேந்திரன் IRS மற்றும் திரு.ரவி சொக்கலிங்கம் ஆகியோரை வாழ்த்துகிறேன்.

ஒன்றாம் வகுப்பு படிக்கும் திருவண்ணாமலை மாவட்டத்தைச் சார்ந்த இலக்கியா அருமையாக திருக்குறள் சொல்லும்பது இரு தினங்களுக்கு முன்பு தமிழ் மொழி இலக்கிய திறனறித் தேர்வில் திருவண்ணாமலை மாவட்டம் முதன்மையாக வந்துள்ளதை நினைவுபடுத்துகிறது.

முதலமைச்சர் குறிப்பிட்டதைப்போல தமிழரசன், தமிழரசி என்று தமிழ் உணர்வுடன் பெயர் வைக்கிறார்கள் என்றால் நம் தமிழ் மக்கள் மொழியின்மீது கொண்டுள்ள பற்றின் அடையாளம் என்று குறிப்பிட்டார்.

முத்தமிழ் அறிஞர் கலைஞர் செய்த திருக்குறள் தொடர்பான செயல்பாடுகளை குறிப்பிட்ட அமைச்சர் சட்டசபையில் திருவள்ளுவர் படம் வைத்ததையும், கன்னியாகுமரியில் சிலை நிறுவியத்தையும், கலைஞரின் திருக்குறள் உரையையும் பெருமிதத்துடன் குறிப்பிட்டார்.

இந்நிகழ்ச்சியில் உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கத்தின் ஒருங்கிணைப்பாளர்கள் திரு.ச.பார்த்தசாரதி, திரு.சி.இராஜேந்திரன் IRS (ஓய்வு) மற்றும் திரு. இரவி சொக்கலிங்கம் ஆகிய மூவரும் கலந்துகொண்டு வாழ்த்துரை வழங்கினர். எக்ஸ்னோரா தலைவர் திரு.செந்தூர்பாரி கலந்துகொண்டு சிறப்பித்தார்.

இந்நிகழ்ச்சியில் திருக்குறள் முற்றோதல் இயக்கத்தின் பயிற்சியில் தமிழக அளவில் ஈடுபட்டுள்ள மண்டலப் பயிற்சி ஒருங்கிணைப்பாளர்கள் மற்றும் மாவட்டப் பயிற்சியாளர்கள் ஆகியோருக்கு கல்வியமைச்சர் பொன்னாடை போர்த்தி பட்டயம் வழங்கி சிறப்பு செய்தார்.

1. திருக்குறள் தூயர் திரு.அ.கோபி சிங், தஞ்சாவூர்
2. திருக்குறள் நினைவாற்றலர் திரு.த.தமிழ் மகிழ்நன், திருக்கழுக்குன்றம்
3. திருக்குறள் திரு.க.காமராசு, திருவண்ணாமலை
4. திரு. க.கோ.பழனி, சென்னை
5. தமிழ்த்திரு. தமிழ்க்குழவி, நாகர்கோவில்
6. திருமிகு. வசந்தி ராஜராஜன், சென்னை பெருநகரப் பயிற்சியாளர்
7. திருமிகு. சங்கீதா கண்ணன், அரியலூர் மாவட்டப் பயிற்சியாளர்
8. திருமிகு. பி.கற்பகவல்லி, செங்கல்பட்டு மாவட்டப் பயிற்சியாளர்

# நாமக்கல் மாவட்டம்

31-08.2023, நாமக்கல் மாவட்டத்தில் உள்ள அரசு பள்ளிகளுக்கு உலக தமிழ் வளர்ச்சி மன்றம் மற்றும் உலக திருக்குறள் முற்றோதல் இயக்கம் சார்பாக திருக்குறள் நூல்களை மாவட்ட முதன்மை கல்வி அலுவலர் ப.மகேஸ்வரி அவர்கள் அரசுப் பள்ளி தலைமையாசிரியர்களுக்கு வழங்கினார். இந்த நிகழ்வில் உலக திருக்குறள் முற்றோதல் இயக்கத்தின் நாமக்கல் மாவட்ட ஒருங்கிணைப்பாளர் திரு.பசுமை மா.தில்லை சிவக்குமார், பள்ளிக் கல்வி துணை ஆய்வாளர் திரு.கிருஷ்ணமூர்த்தி, பள்ளி தலைமையாசிரியர்கள் மற்றும் மாணவ மாணவிகள் பங்கேற்றனர். முதன்மைக் கல்வி அலுவலர் ப.மகேஸ்வரி அவர்கள் மாணவ-மாணவிகளிடம் திருக்குறள் சொல்லக் கேட்டு பாராட்டினார். மாவட்ட முதன்மை கல்வி அலுவலர் உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கத்தின் இந்த சேவை வெற்றிபெற வாழ்த்தினார்.



## அரசுப் பள்ளிகளுக்கு திருக்குறள் புத்தகம் வழங்கல்

அரசுப் பள்ளிகளுக்கு திருக்குறள் புத்தகங்களை வழங்கிய மாவட்ட முதன்மைக் கல்வி அலுவலர் ப.மகேஸ்வரி.

நாமக்கல், ஆக. 31: உலக தமிழ் வளர்ச்சி மன்றம் மற்றும் உலக திருக்குறள் முற்றோதல் இயக்கம் சார்பில், நாமக்கல் மாவட்டத்தில் உள்ள அரசுப் பள்ளிகளுக்கு திருக்குறள் புத்தகம் வழங்கும் நிகழ்ச்சி முதன்மைக் கல்வி அலுவலகத்தில் வியாழக்கிழமை நடைபெற்றது.

மாவட்ட முதன்மைக் கல்வி அலுவலர் ப.மகேஸ்வரி தலைமையாசிரியர்களிடம் புத்தகங்களை வழங்க, அவர்கள் தங்களது பள்ளி மாணவ, மாணவியர் மூலமாக பெற்றுக் கொண்டனர்.

இந்த நிகழ்ச்சியில், உலக திருக்குறள் முற்றோதல் இயக்க மாவட்ட ஒருங்கிணைப்பாளர் மா.தில்லை சிவகுமார், பள்ளிக் கல்வி துணை ஆய்வாளர் கிருஷ்ணாமூர்த்தி, தலைமையாசிரியர்கள், மாணவ, மாணவியர் கலந்துகொண்டனர்.

நன்றி: தினமணி



## கொல்லிமலையில் திருக்குறள் நூல் வழங்கும் விழா

நாமக்கல், செப்.15

நாமக்கல் மாவட்டம் கொல்லிமலை அரியூர் நாடு ஊராட்சி பகுதிக்கு உட்பட்ட கிழக்குவலவு அரசுஊராட்சி ஒன்றிய நடுநிலைப் பள்ளியில் பயிலும் மாணவ மாணவிகளுக்கு உலக திருக்குறள் முற்றோதல் இயக்கம் சார்பாக திருக்குறள் நூல் வழங்கும் விழா நடைபெற்றது.

இதில் உலக திருக்குறள் முற்றோதல் இயக்கம் உலக சமுதாய சேவா சங்கம் சார்பாக நாமக்கல் கொல்லி ஓமலை அரியூர் நாடு கிழக்கு வளவு ஊராட்சி ஒன்றிய நடுநிலைப் பள்ளியில் 100க்கும் மேற் பட்ட மலை வாழ் குழந்தை கள் படித்து வருகின்றனர்.

அரசு பள்ளியில் பயிலும் மாணவ மாணவிகளுக்கு 1300 திருக்குறள் கொண்ட புத்தகம் வழங்கப் பட்டது.

மேலும் பள்ளிக்கு பத்துக்கும் மேற்பட்ட டெஸ்க் மற்றும் நாற்காலி உதவித் தொகையாக 10 ஆயிரம் வழங்கப்பட்டது.

மேலும் மாணவ மாணவிகளின் பெற்றோர்களுக்கு மன கவலை களை

பொத்தனூர் அரசு மேல் நிலைப்பள்ளியில் திருக்குறள் முற்றோதல் இயக்கம் சார்பாக 128 திருக்குறள் நூல்கள் வழங்கப்பட்டது. 6,7ம் வகுப்பு மாணவ மாணவிகளுக்கு 26.09.2023 அன்று வழங்கப்பட்டது. பள்ளித் தலைமை ஆசிரியர் திரு.வ.குமார் அவர்கள் தலைமையில் தமிழ் ஆசிரியர் திரு. பொ.செ.சுப்பிரமணி முன்னிலை வகித்தார். கவிஞர் திருமதி. கமலா சிவம் நூல்களை வழங்கனார். உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்க நாமக்கல் மாவட்ட ஒருங்கிணைப்பாளர் மா.தில்லை சிவக்குமார் கருத்துறை ஆற்றினார்.



## இயக்கச் செய்திகள்



ஞாயிறு, செப்டம்பர் 3,2023 அன்று நடந்த உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கத்தின் மாவட்ட ஒருங்கிணைப்பாளர்கள் கூட்டத்தில் தமிழ்நாட்டின் பல மாவட்ட திருக்குறள் மன்றங்களில் பொறுப்பாளர்கள், மாவட்டத் தொடர்பாளர்கள் கலந்துகொண்டனர். இதில் உலகத் தமிழ் வளர்ச்சி மன்றத்துடன் இணைந்து ஒவ்வொரு மாவட்டத்திற்கும் முதல்கட்டமாக அனுப்பப்பட்டுள்ள 800-1000 திருக்குறள் நூல்களை மாவட்ட ஆட்சியர், தமிழ் வளர்ச்சித்துறை உதவி இயக்குநர், மாவட்ட முதன்மைக் கல்வி அலுவலர்களை வைத்து நிகழ்ச்சி நடத்தி திருக்குறள் நூல்களை அரசுப்பள்ளி தலைமையாசிரியர்களுக்கு வழங்குவது குறித்து விளக்கப்பட்டது. நாமக்கல், தஞ்சை, புதுச்சேரி உள்ளிட்ட பகுதிகளில் வெற்றிகரமாக நிகழ்ச்சி நடத்தி முற்றோதல் பயிற்சியை முடித்தவர்களுக்கு பாராட்டு தெரிவிக்கப்பட்டது.

கூட்டத்தை இயக்கத்தின் ஒருங்கிணைப்பாளர் திரு.ச.பார்த்தசாரதி தொடங்கிவைத்து நோக்கவுரையாற்றினார். தொடர்ந்து இயக்கத்தின் தலைவர் திரு. சி.இராசேந்திரன்,IRS(ஓய்வு) அவர்கள் அனைவரையும் வரவேற்று கூட்டத்தை ஒழுங்குசெய்து நெறியாள்கை செய்தார்.






# 2022 சனவரி மாதம் அரசு நடத்திய மாவட்ட அளவிலான திருக்குறள் முற்றோதல் போட்டியில் வெற்றி பெற்ற மாணவர்கள் - மாவட்டங்கள்

2022 சனவரி மாதம் அரசு நடத்திய மாவட்ட அளவிலான திருக்குறள் முற்றோதல் போட்டியில் வெற்றிபெற்ற மாணவர்களுக்கு ரூபாய் 15000 மற்றும் தமிழ் வளர்ச்சித்துறை சார்பில் சான்றிதழ் வழங்கப்பட்டுவருகிறது. இதுவரை மாநிலம் முழுவதும் மொத்தம் 70 பேர் மட்டுமே (சராசரியாக மாவட்டத்திற்கு 2 பேர்) என்ற கட்டுப்பாடு நீங்கி முதல்முறையாக எத்தனைபேர் வேண்டுமானாலும் பங்கேற்கலாம் என்று அரசு அறிவித்தபிறகு திருக்குறள் முற்றோதல் செய்யும் மாணவர்களின் எண்ணிக்கை 77.14 விழுக்காடு உயர்ந்துள்ளது.

2022 ஆம் ஆண்டு தேர்வான மாணவ-மாணவிகளின் எண்ணிக்கை விவரங்களை ஆய்வு செய்து உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம் தன்னார்வ அமைப்பு கவனம் செலுத்தவேண்டிய மாவட்டங்களில் இலவசத் திருக்குறள் நூல்கள் வழங்கி, இலவசப் பயிற்சியை வழங்க உரிய வாய்ப்புள்ளவர்களுடன் இணைந்து முயற்சி மேற்கொள்கிறது..

**2022 ,சனவரி மாதம் நடந்த முற்றோதல் போட்டியில் தமிழ்நாடு மாவட்ட அளவில் திருக்குறள் முற்றோதல் செய்து தமிழக அரசின் 15000 ரூபாய் பரிசையும் , சான்றிதழையும் பெற்ற மாணவ-மாணவியரின் எண்ணிக்கை**

| எண் | மாவட்டம் | மாணவ - மாணவியர் எண்ணிக் |
|---|---|---|
| 1 | செங்கல்பட்டு | 15 |
| 2 | கன்னியாகுமரி | 14 |
| 3 | திருவண்ணாமலை | 12 |
| 4 | தஞ்சாவூர் | 10 |
| 5 | விருதுநகர் | 9 |
| 6 | திருச்சி | 8 |
| 7 | திருவள்ளூர் | 6 |
| 8 | சிவகங்கை | 6 |
| 9 | விழுப்புரம் | 6 |
| 10 | திண்டுக்கல் | 4 |
| 11 | தேனி | 4 |
| 12 | அரியலூர் | 2 |
| 13 | கிருஷ்ணகிரி | 2 |
| 14 | கோயம்புத்தூர் | 2 |
| 15 | சென்னை | 2 |
| 16 | சேலம் | 2 |
| 17 | திருப்பூர் | 2 |
| 18 | திருவாரூர் | 2 |
| 19 | தூத்துக்குடி | 2 |
| 20 | தென்காசி | 2 |
| 21 | நாமக்கல் | 2 |
| 22 | இராணிப்பேட்டை | 1 |
| 23 | ஈரோடு | 1 |
| 24 | கடலூர் | 1 |
| 25 | காஞ்சிபுரம் | 1 |
| 26 | திருநெல்வேலி | 1 |
| 27 | நாகப்பட்டினம் | 1 |
| 28 | நீலகிரி | 1 |
| 29 | புதுக்கோட்டை | 1 |
| 30 | பெரம்பலூர் | 1 |
| 31 | மதுரை | 1 |
| 32 | இராமநாதபுரம் | 0 |
| 33 | கரூர் | 0 |
| 34 | கள்ளக்குறிச்சி | 0 |
| 35 | தருமபுரி | 0 |
| 36 | திருப்பத்தூர் | 0 |
| 37 | மயிலாடுதுறை | 0 |
| 38 | வேலூர் | 0 |
| | TOTAL | 124 |

**மாநில அளவில் முற்றோதல் பரிசு பெற்ற மொத்த மாணவர்கள் : 124**

ஆண்டுக்கு 70 பேருக்கு பரிசு என்ற கட்டுப்பாடு நீங்கியபிறகு உயர்ந்துள்ள மாணவர்களின் விழுக்காடு

**77.14**

**முற்றோதலில் முன்னணி மாவட்டங்கள்:**

| எண் | மாவட்டம் | மாணவ - மாணவியர் எண்ணிக் |
|---|---|---|
| 1 | செங்கல்பட்டு | 15 |
| 2 | கன்னியாகுமரி | 14 |
| 3 | திருவண்ணாமலை | 12 |
| 4 | தஞ்சாவூர் | 10 |
| 5 | விருதுநகர் | 9 |
| 6 | திருச்சி | 8 |
| 7 | திருவள்ளூர் | 6 |
| 8 | சிவகங்கை | 6 |
| 9 | விழுப்புரம் | 6 |

**முற்றோதலில் கவனம் செலுத்தப்படவேண்டிய மாவட்டங்கள்**

| எண் | மாவட்டம் | மாணவ - மாணவியர் எண்ணிக்கை |
|---|---|---|
| 1 | இராமநாதபுரம் | 0 |
| 2 | கரூர் | 0 |
| 3 | கள்ளக்குறிச்சி | 0 |
| 4 | தருமபுரி | 0 |
| 5 | திருப்பத்தூர் | 0 |
| 6 | மயிலாடுதுறை | 0 |
| 7 | வேலூர் | 0 |

**தகவல் தொகுப்பு:**

www.Thirukkural.ValaiTamil.com

முற்றோதலில் ஆர்வம் உள்ள மாணவர்களுக்கு இலவசப் பயிற்சியும், இலவச திருக்குறள் நூலும் பெற உங்கள் மாவட்ட உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கத்தின் பயிற்சித் தொடர்பாளரை தொடர்புகொள்க:

www.Thirukkural.ValaiTamil.Com | Kural.Mutrothal@gmail.com

# தஞ்சாவூர் மாவட்டம்

செப்டம்பர், 4 2023, உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம், உலகத் தமிழ் வளர்ச்சி மன்றம் உதவியுடன் முதல் கட்டமாக 1000 திருக்குறள் நூல்கள் தஞ்சாவூர் மாவட்டத்தில் உள்ள அரசுப்பள்ளி தலைமையாசிரியர்களுக்கு மாவட்ட வருவாய் அலுவலர் அவர்களைக்கொண்டு வழங்கப்பட்டது. உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கத்தின் இலவச நூல் வழங்கி, இலவச முற்றோதல் பயிற்சி வழங்கும் பொறுப்பை தஞ்சை திருக்குறள் முற்றோதல் பயிற்றகம் ஏற்றுக்கொண்டு, இயக்கத்தின் மண்டலப் பயிற்சியாளர் திருக்குறள் தூயர் திரு.கோபிசிங் அவர்கள் முன்னெடுப்பில் மிகச்சிறப்பாக நிகழ்வு நடைபெற்றது.

இந்நிகழ்ச்சியில் தமிழ் வளர்ச்சித்துறை உதவி இயக்குநர் ஐ.சபீர் பானு, முதன்மைக் கல்வி அலுவலர் திரு.ஆர்.மதன்குமார், மாவட்டக் கல்வி அலுவலர் மெ.கோவிந்தராஜ், மாவட்டத் தொடக்கக் கல்வி அலுவலர் மா.அய்யாக்கண்ணு உள்ளிட்ட பலரும் கலந்துகொண்டு சிறப்பித்தனர். இந்நிகழ்ச்சியில் 2022 ஆம் ஆண்டில் தஞ்சாவூர் மாவட்டத்தில் முற்றோதல் செய்து வெற்றிபெற்ற 10 மாணவ மாணவியர்களுக்கு ரூபாய் 15,000க்கான பரிசுத்தொகை மற்றும் சான்றிதழை மாவட்ட ஆட்சியர் வழங்கினார். தொடர்ந்து தஞ்சை மாவட்டம் முழுதும் உள்ள அரசுப்பள்ளிகள் இலவசமாக திருக்குறள் முற்றோதல் பயிற்சிபெற்ற உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம் மற்றும் தஞ்சை திருக்குறள் முற்றோதல் பயிற்றகம் இணைந்து ஏற்பாடு செய்துள்ளது.



உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம்
சென்னை
பள்ளி மாணவர்களுக்கு
இலவச திருக்குறள் முற்றோதல் மனனப் பயிற்சி
பயிற்றுநர்
திருக்குறள் திலகம்
ச.ஆனந்தி
கைப்பேசி : 96008 90134
மண்டலப் பயிற்றுநர்
திருக்குறள் தூயர்
அ.கோபிசிங்
கைப்பேசி : 88385 11065
திருக்குறள் முற்றோதல் பயிற்றகம்
திருவள்ளுவர் வளாகம், 26, வளனார் நகர், தஞ்சாவூர் – 5.



**தஞ்சையில் 1330 திருக்குறள் முற்றோதல் செய்த மாணவர்களுக்கு பரிசுத் தொகை வழங்கல்**

தஞ்சாவூர்: தஞ்சையில் நடந்த நிகழ்ச்சியில் திருக்குறள் முற்றோதல் செய்த மாணவர்களுக்குப் பரிசு மற்றும் வயது முதிர்ந்த தமிழறிஞர்களுக்கு கட்டணமில்லா பேருந்துப் பயணச்சலுகை ஒப்பளிப்பு அரசாணை ஆகியவற்றை மாவட்ட வருவாய் அலுவலர் தியாகராஜன் வழங்கினார். தமிழ் வளர்ச்சித் துறையால் ஆண்டுதோறும் 1330 திருக்குறளையும் முற்றோதல் செய்யும் மாணவர்களுக்குப் பரிசுத்தொகை ரூ.10,000 வழங்கப்பட்டு வந்தது. 2022-2023 ஆம் நிதியாண்டிலிருந்து இப்பரிசுத்தொகை ரூ.15,000 ஆக உயர்த்தப்பட்டுள்ளது.தற்போது தஞ்சாவூர் மாவட்டத்தில் 1330 திருக்குறளையும் முற்றோதல் செய்த மாணவர்கள் 10 பேருக்கு ரூ.15,000 க்கான காசோலையையும் முதலமைச்சர் கையெழுத்திட்ட சான்றிதழ் மற்றும் அரசாணையையும் தஞ்சாவூர் மாவட்ட ஆட்சியர் அலுவலகக் கூட்ட அரங்கில் நடந்த நிகழ்ச்சியில் மாவட்ட வருவாய் அலுவலர் தியாகராஜன் வழங்கினார்.





உலக திருக்குறள் முற்றோதல் இயக்கம் சார்பில் திருக்குறள் புத்தகம் வழங்கும் நிகழ்வில் மாவட்ட வருவாய் அலுவலர் தியாகராஜன், தமிழ் வளர்ச்சித்துறை உதவி இயக்குனர் ஷமீர்பானு மற்றும் மண்டல பயிற்சியாளர் கோபிசிங் உள்ளனர்.

**உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம் சார்பில்**

**தஞ்சை மாவட்ட அரசு பள்ளிகளுக்கு திருக்குறள் புத்தகம் வழங்கல்**

தஞ்சாவூர்,செப்.6–

வட அமெரிக்கத்தமிழ் வளர்ச்சி மன்றம் தமிழ்நாடு அரசுப்பள்ளி மாணவர்களுக்கு ஆண்டு தோறும் 80,000 திருக்குறள் நூல்களை இலவசமாக வழங்கும் திட்டத்தை முன்னெடுத்துள்ளது. இதனை பள்ளிக்கல்வித்துறை அமைச்சர் அன்பில் மகேஷ் பொய்யா மொழி சென்னையில் கடந்த ஆண்டு தொடங்கி வைத்தார்.

உலகத் திருக்குறள் ...

கரந்தை, குறிச்சித்தெரு, தென் கீழ் அலங்கம், வண்டிக்காரத் தெரு, மகர்நோம்புச்சாவடி, முனிசிபல் காலனி, வீட்டுவசதி வாரியம், சிரமேல்குடி, ஒட்டங்காடு, துவரங்குறிச்சி, மதுக்கூர் வடக்கு, மொழையூர், மல்லபுரம், சக்கராப்பள்ளி, திருவையாறு, அருந்தவபுரம், ஆகிய இடங்களில் உள்ள பள்ளிகளில் பணியாற்றும் தலைமையாசிரியர்கள் நேரில் வந்து 1000 திருக்குறள் நூல்களை மாணவர்களிடம் வழங்கப் பெற்று சென்றனர்.

உலகத் திருக்குறள் முற்றோதல் மண்டலப் பயிற்றுநர் கோபிசிங் விழா ஏற்பாடுகளை செய்திருந்தார். தஞ்சை திருக்குறள் முற்றோதல் பயிற்றக பயிற்றுனர் ஆனந்தி நன்றி கூறினார். அரசின் பரிசுத்தொகை ரூ.15,000யும் வென்ற மாணவர்கள் வந்திருந்த அனைவருக்கும் இனிப்புகள் வழங்கி மகிழ்வைப் பகிர்ந்து கொண்டனர்.




*ஊடகச் செய்தி: நன்றி: மாலை மலர்*

**அரசு உதவிபெறும் பள்ளிக்கு திருக்குறள் நூல் வழங்கப்பட்டது**









7.9.2023 அமிர்தா வித்யாலயம் தஞ்சாவூர் பள்ளியில் தஞ்சை மாவட்ட திருக்குறள் முற்றோதல் பயிற்சியாளர் ஆனந்தி அவர்கள் திருக்குறள் வகுப்பை தொடங்கி வைத்தார்கள்.உடன் தலைமைப் பயிற்சியாளர் திருக்குறள் தூயர் அவர்களும் வகுப்பில் கலந்து கொண்டார்.

# கன்னியாகுமரி மாவட்டம்

கன்னியாக்குமரி மாவட்டத்தில் உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கத்தின் தலைமைப் பயிற்சியாளர் தமிழ்க்குழவி திரு.விஸ்வநாதன் அவர்களிடம் கற்ற மாணவர்களுக்கு அரசு வழங்கும் முற்றோதல் பரிசு.

கையா, அப்துல் வஹாப், தூத் ... னிட்டு 100 அடி உயர கொடிக் ... நிர்வாகிகள், தொண்டர்கள் பங் கேற்றனர்.

## போட்டிகளில் வென்ற மாணவர்-மாணவிகளுக்கு குறைதீர் கூட்டத்தில் பரிசு

**நாகர்கோவில், செப். 4:** நாகர்கோவிலில் உள்ள ஆட்சியரகக் கூட்டரங்கில் திங்கள்கிழமை நடைபெற்ற மக்கள் குறைதீர் கூட்டத்தில், பல்வேறு போட்டிகளில் வெற்றிபெற்ற மாணவர்களுக்கு ஆட்சியர் பி.என். ஸ்ரீதர் பரிசுகள் வழங்கிப் பாராட்டினார்.

குறைதீர் கூட்டத்துக்கு ஆட்சியர் பி.என். ஸ்ரீதர் தலைமை வகித்து, உதவித் தொகைகள் உள்பட பல்வேறு கோரிக்கைகள் தொடர்பாக பொதுமக்கள் அளித்த 243 மனுக்களைப் பெற்றுக்கொண்டார்; அவற்றின் மீது விரைந்து தீர்வு காணுமாறு துறை சார்ந்த அலுவலர்களை அறிவுறுத்தினார்.

தொடர்ந்து, மாவட்ட தமிழ் வளர்ச்சித் துறை சார்பில் நடைபெற்ற திருக்குறள் முற்றோதல் போட்டியில் வெற்றிபெற்ற ந. ஹர்ஷா, ம.ச. தம்சித்ஜீவா, ச. அகல்யா, ஆ. ராஜி, சி. லட்சரா, ச. ஹேன்சிகா, கோ. சந்தானலட்சுமி, செ. அபினேஷ்குமார், ஞா. நிதீஷ்லால், ரா.சி. ஹரிகரன், தி. அக்ஷயா, கு. திலக், ச.அ.நிதீஷ், பொ. விஷாலி ஆகிய 14 மாணவர்- மாணவிகளுக்கு தலா ரூ. 15 ஆயிரத்துக்கான காசோலை, சான்றிதழ்களை ஆட்சியர் வழங்கினார்.

போட்டிகளில் வெற்றிபெற்ற மாணவர்-மாணவிகளுக்கு பரிசு, சான்றிதழ்கள் வழங்கிய ஆட்சியர் பி.என். ஸ்ரீதர். உடன், மாவட்ட செய்தி-மக்கள் தொடர்பு அலுவலர் பா. ஜான்ஜெகத்பிரைட், குறளகம் நிறுவனர் தமிழ்க்குழவி உள்ளிட்டோர்.

மேலும், அம்பேத்கர் பிறந்தநாளையொட்டி பள்ளி மாணவர்-மாணவிகளுக்கு நடைபெற்ற பேச்சுப் போட்டியில் முதல் பரிசு பெற்ற ஜா. லீனஸ்சேரனுக்கு ரூ. 5 ஆயிரத்துக்கான காசோலை, 2ஆம் பரிசு பெற்ற தா.ரா. சென்பகவல்லிக்கு ரூ. 3 ஆயிரத்துக்கான காசோலை, 3ஆம் பரிசு பெற்ற ப. அக்சரா, சிறப்பு பரிசு பெற்ற ச. வைகுண்டபெருமாள் ஆகியோருக்கு தலா ரூ. 2 ஆயிரத்துக்கான காசோலைகள், சான்றிதழ்களை வழங்கினார். பேச்சுப் போட்டியில் வென்ற கல்லூரி மாணவர்-மாணவிகள், முன்னாள் முதல்வர் கருணாநிதி நூற்றாண்டு விழா பேச்சுப் போட்டியில் வென்ற பள்ளி மாணவர்-மாணவிகளுக்கு பரிசு, சான்றிதழ்களை ஆட்சியர் வழங்கினார்.

சமூகப் பாதுகாப்புத் திட்ட தனித்துணை ஆட்சியர் புகாரி, ஒருங்கிணை குழந்தைகள் வளர்ச்சித் திட்ட அலுவலர் ஜெயந்தி, தமிழ் வளர்ச்சித் துறை உதவி இயக்குநர் கனகலெட்சுமி, குறளகம் நிறுவனர் தமிழ்க்குழவி உள்ளிட்ட பலர் பங்கேற்றனர்.

*குமரி மாவட்டம் குறள் பரிசு பெற்ற மாணவர்கள் 14, பேர்*





# இணையவழி திருக்குறள் முற்றோதல் பயிற்சி தொடக்கவிழா



## உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம்

வழங்கும்

### அரசுப்பள்ளி மாணவர்களுக்கான இலவசத் திருக்குறள் முற்றோதல் பயிற்சி

**தொடங்கி வைப்பவர்**



முனைவர். ஔவை அருள்
இயக்குநர், தமிழ் வளர்ச்சித் துறை.

**வாழ்த்துரை**



திரு. மயில்சாமி அண்ணாதுரை
இஸ்ரோ விஞ்ஞானி



டாக்டர் விஜய் ஜானகிராமன்
புரவலர், ஹார்வர்டு தமிழ் இருக்கை, USA.

**பயிற்சி தொடக்கம்**
நாள் : 14-Oct-2023
சனிக்கிழமை
நேரம் :5:00 PM (IST)

- பயிற்சிபெறும் அனைத்து மாணவர்களுக்கும் இலவசத் திருக்குறள் நூல் வழங்கப்படும்.
- 1330 திருக்குறள் முற்றோதல் முடித்து தயாரான மாணவர்கள் தமிழ்நாடு அரசு வழங்கும் ரூபாய் 15000, சான்றிதழ் பெற வழிகாட்டப்படும்.
- சூம் (Zoom) வழியே இணைய முடியாதவர்கள் www.ValaiTamil.TV நேரலையில் இணைந்து பயிற்சி பெறவும், பயிற்சியாளருடன் உரையாடவும் தொழில்நுட்ப வசதி செய்யப்பட்டுள்ளது.

**பயிற்சி நாட்கள் - நேரம்**

திங்கள் முதல் வெள்ளி வரை
நண்பகல் 1:15 மணி முதல் 1:45 வரை

சனி மற்றும் ஞாயிறு
காலை 6:00 மணி முதல் 6:45 வரை
மாலை 7:30 மணி முதல் 8:00 வரை

**இணையவழிப் பயிற்சியாளர்**



திருக்குறள்
திரு. க. காமராசு
தலைமைப் பயிற்சியாளர்
+91 6380 278 863



Meeting ID : 958 1611 4007
Passcode : 1330
LIVE
www.ValaiTamil.TV

**ஆதரவு அமைப்புகள்**

உலகத் தமிழ் வளர்ச்சி மன்றம், USA.



வள்ளுவர் குரல் குடும்பம்







S2S டிரஸ்ட்

**REGISTER TODAY** www.ValaiTamil.com/Thirukkural/India/



**ஒருங்கிணைப்பாளர்கள்**

திட்ட ஒருங்கிணைப்பு



திரு. ச. பார்த்தசாரதி
ஆசிரியர், வலைத்தமிழ்

அரசு மற்றும் பயிற்றுநர் ஒருங்கிணைப்பு



திரு. சி. இராஜேந்திரன், IRS (ஓய்வு)
ஒருங்கிணைப்பாளர், வள்ளுவர் குரல் குடும்பம்

அரசுப் பள்ளிகள் ஒருங்கிணைப்பு



திரு. இரவி சொக்கலிங்கம்
நிறுவனர், S2S அறக்கட்டளை

புரவலர் ஒருங்கிணைப்பு



திரு. செந்தில் துரைசாமி
திருக்குறள் ஆர்வலர், அமெரிக்கா



திரு. க.செங்குட்டுவன்
திருக்குறள் ஆர்வலர், இந்தியா



திரு. கொழந்தவேல் இராமசாமி
அமெரிக்கா

**தொடர்பு கொள்ள:**
www.Thirukkural.ValaiTamil.com || kural.mutrothal@gmail.com || +91 73055 71897




வழங்கும்

# அரசுப்பள்ளி மாணவர்களுக்கான இலவசத் திருக்குறள் முற்றோதல் பயிற்சி

## தலைமைப் பயிற்சியாளர்கள்

**கவிஞர். தமிழ்க்குழவி**
திருக்குறள் வாழ்வியலாக்கப் பயிற்சி மையம்.
நாகர்கோவில்




திருக்குறள் தூயர்
**திரு. அ. கோபி சிங்**
திருக்குறள் முற்றோதல் பயிற்றகம், தஞ்சாவூர்.




திருக்குறள்
**திரு. க. காமராசு**
உலகத் திருக்குறள் முற்றோதல் மையம்,
திருவண்ணாமலை




திருக்குறள் நினைவாற்றலர்
**த.தமிழ் மகிழ்நன்**
இறை திருக்குறள் பயிற்றகம்,
திருக்கழுக்குன்றம்.




**திரு. க. கோ. பழனி**
திருவள்ளுவர் கல்வி மன்றம்,
சென்னை.




## மாவட்டப் பயிற்சியாளர்கள்

**செங்கல்பட்டு**




**அரியலூர், புதுச்சேரி**




**திண்டுக்கல்**




**தஞ்சை**




### ஆதரவு அமைப்புகள்

உலகத் தமிழ் வளர்ச்சி மன்றம், USA.

வள்ளுவர் குரல் குடும்பம்

வலைத்தமிழ்.டிவி
www.ValaiTamil.TV

S2S டிரஸ்ட்

### பயிற்சி தொடக்கம்

நாள் : 14-Oct-2023
சனிக்கிழமை
நேரம் :5:00 PM (IST)

zoom




LIVE
www.ValaiTamil.TV

**REGISTER TODAY** www.ValaiTamil.com/Thirukkural/India/



### ஒருங்கிணைப்பாளர்கள்

**திட்ட ஒருங்கிணைப்பு**
திரு. ச. பார்த்தசாரதி
ஆசிரியர், வலைத்தமிழ்

**அரசு மற்றும் பயிற்றுநர் ஒருங்கிணைப்பு**
திரு. சி. இராஜேந்திரன், IRS (ஓய்வு)
ஒருங்கிணைப்பாளர், வள்ளுவர் குரல் குடும்பம்

**அரசுப் பள்ளிகள் ஒருங்கிணைப்பு**
திரு. இரவி சொக்கலிங்கம்
நிறுவனர், S2S அறக்கட்டளை

**புரவலர் ஒருங்கிணைப்பு**
திரு. செந்தில் துரைசாமி
திருக்குறள் ஆர்வலர்,
அமெரிக்கா

திரு. க.செங்குட்டுவன்
திருக்குறள் ஆர்வலர்,
இந்தியா

திரு. கொழந்தவேல் இராமசாமி
அமெரிக்கா

**தொடர்பு கொள்ள:**
www.Thirukkural.ValaiTamil.com || kural.mutrothal@gmail.com || +91 73055 71897

# செங்கல்பட்டு மாவட்டம்

28/01/2022 அன்று, 1330 அருங் குறட்பாக்கள் முற்றோதல் திறனாய்வு தேர்வுக்கு சென்று தேர்வு ஆன நமது திருக்குறள் குழந்தைகள் 1.நா.காவ்யஸ்ரீ, 2.செ.கனிஷ்கா, 3.க.ம.திவ்யதர்சினி, 4.செ.ஸ்ரீநிவாஷ் நால்வருக்கும் 07/09/2023 தேதி மாலை 4.30 மணிக்கு செங்கல்பட்டு ஆட்சியர் அலுவலகத்தில் செங்கல்பட்டு ஆட்சியர் பாராட்டுச் சான்றிதழ், பரிசு ₹15000/ வழங்கினார் என்பதை மகிழ்ச்சியோடு தெரிவித்துக் கொள்கிறேன். அனைவருக்கும் வாழ்த்துகள் வாழ்க வளமுடன்..

**திருக்குறள் க.கோ.பழநி, நிறுவனர் – பயிற்றுநர்**
தலைமைப் பயிற்சியாளர், உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம்

2021-2022 ஆம் ஆண்டு திருக்குறள் முற்றோதல் போட்டியில் வெற்றி பெற்ற மாணவர்களுக்கு (07:09:2023) அன்று மாலை 4:30 மணிக்கு செங்கல்பட்டு மாவட்ட ஆட்சியர் அவர்களால் பரிசு தொகை வழங்கு உள்ளனர்.

மாணவர்கள்:

1. ந.நம்பிகோவிந்தன்
2. ந.லேகா தமிழ் தனம்
3. கு.சாய்ராம்
4. சு.லோகேஷ்
5. இரா.தாரனேஷ்வர்
6. வி.தருண்
7. மு.ரெ.ரஃபா
8. இரா.நீரசா
9. சாலை சனாத்தனன்

**திருமதி. கற்பகவள்ளி**
செங்கல்பட்டு மாவட்ட பயிற்சியாளர்
உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம்

(29:09:2023) காஞ்சிபுரம், தமிழ் வளர்ச்சித் துறை உதவி இயக்குநர் அவர்களை நேரில் சந்தித்து செங்கல்பட்டு மாவட்டம், அரசு நடத்தும் நிகழ்ச்சியில் திருக்குறள் புத்தகம் அரசு பள்ளிகளுக்கு வழங்க வேண்டும் என்று கடிதம் வழங்கப்பட்டது. கடிதம் பெற்றுக் கொண்டு, வருகின்ற நவம்பர் 24ஆம் நாள் மாவட்ட ஆட்சியர் மற்றும் கல்வி அதிகாரி வருகின்ற நிகழ்ச்சியில் திருக்குறள் புத்தகம் அளிக்கலாம் என்று கூறினர்.



# திருவண்ணாமலை மாவட்டம்

உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கத்தின் திருவண்ணாமலை நிகழ்வுகள்
ஒருங்கிணைப்பு: திருக்குறள் காமராசு, தலைமைப் பயிற்சியாளர்.







தமிழ் வளர்ச்சித்துறை சார்பில் நடந்த

திருக்குறள் முற்றோதல் போட்டியில் வெற்றி பெற்ற மாணவர்களுக்கு பரிசு

கலெக்டர் வழங்கினார்

திருக்குறள்களை ஒப்புவித்து 3 வயது சிறுமி அசத்தல்

செங்கம் பேரூராட்சியில்




உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கத்தின் தலைமைப் பயிற்சியாளர் திருக்குறள் காமராசு அவர்கள் இணையவழியில் மாணவர்களுக்கு முற்றோதல் வகுப்பு எடுக்கும்போது..



நாள்: 27.09.2023, இடம்: அரசு மகளிர் உயர்நிலைப்பள்ளி மரக்காணம். திருக்குறள் நூல்கள் வழங்கும் நிகழ்வு. திருக்குறள் காமராசு தலைமைப் பயிற்சியாளர்



# சென்னை







தினமணி 8·9·2023

## திருக்குறள் முற்றோதல்: 15 மாணவர்களுக்கு பரிசு

திருக்குறள் முற்றோதலுக்காக தலா ரூ.15,000 பரிசுத்தொகை மற்றும் சான்றிதழ் பெற்ற மாணவர்களுடன் செங்கல்பட்டு ஆட்சியர் ராகுல் நாத்.

செங்கல்பட்டு, செப். 7: திருக்குறள் முற்றோதல் செய்த செங்கல்பட்டு மாவட்டத்தைச் சேர்ந்த 15 மாணவர்களுக்கு பரிசுத்தொகை, சான்றிதழ்களை மாவட்ட ஆட்சியர் ராகுல் நாத் வியாழக்கிழமை வழங்கினார்.

தமிழ் வளர்ச்சித் துறையால் ஆண்டுதோறும் 1,330 திருக்குறளையும் முற்றோதல் செய்யும் மாணவர்களுக்குப் பரிசுத் தொகையா ரூ.10,000 வழங்கப்பட்டு வந்தது. நிகழ் 2022-2023-ஆம் நிதியாண்டிலிருந்து இந்த பரிசுத் தொகையானது ரூ.15,000-ஆக உயர்த்தப்பட்டுள்ளது.

இதனிடையே, செங்கல்பட்டு மாவட்டத்தில் 1,330 திருக்குறளையும் முற்றோதல் செய்த 15 மாணவர்களுக்கு (1. க.ம.திவ்யதர்ஷினி, 2. நா.காவ்யஸ்ரீ, 3.செ.கனிஷ்கா, 4. மு.ரெ.ரஸ்பா, 5. ரா.நீரஜா, 6. உ.லோநேத்ரா, 7. மு.பி.இனியன், 8. இரா.தாரனேஷ்வர், 9. ந.நமிபி கோவிந்தன், 10. ந.லேகா தமிழ்தனம், 11. க.லோகேஷ், 12.சாலைசனாதனன், 13. வி.தருண், 14.கு.சாய்ராம், 15.தி.ஸ்ரீநிவாஸ்) ரூ.15,000-க்கான காசோலையையும், முதல்வர் கையொப்பமிட்ட சான்றிதழ் மற்றும் அரசாணையையும் வியாழக்கிழமை மாவட்ட ஆட்சியர் ஆர்.ராகுல் நாத் மாவட்ட ஆட்சியர் அலுவலகத்தில் நடைபெற்ற நிகழ்ச்சியில் வழங்கினார்.

நிகழ்வில் மாவட்ட தமிழ் வளர்ச்சி உதவி இயக்குநர்(மு.கூ.பொ) க.பவானி, பள்ளி மாணவ, மாணவிகள் மற்றும் அரசு அலுவலர்கள் கலந்து கொண்டார்.

அடையாறு திருக்குறள் சங்கம் 23ஆம் ஆண்டு விழாவில் கலந்து கொண்ட திருக்குறள் குழந்தைகளுக்கு நமது உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம், திருக்குறள் புத்தகம் வழங்கி அவர்களை “திருக்குறள் முற்றோதல் பயிற்றகத்தில்” இணைத்துள்ளேன்.

வாழ்க வளமுடன்
தலைமைப் பயிற்சியாளர்
**திருக்குறள் க.கோ.பழநி**
உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம்




இந்த ஆண்டு சென்னை மாநகரில் முதல் திருக்குறள் குழந்தை ம.யாசிகா (6ஆம் வகுப்பு) மதுரவாயல் மாநகர நடுநிலைப்பள்ளி மாணவி 1330 அருங்குறட்பாக்கள் முடித்து விண்ணப்பம் துணை இயக்குநர் அவர்களிடம் பதிவு செய்த தருணம்.






# வேலூர் மாவட்டம்

**உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம் சென்னை உடன் இணைந்து திருவள்ளுவர் சேவா சங்கம் பள்ளி மாணாக்கர்களுக்கு திருக்குறள் நூல் வழங்கும் விழா**

உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம் சென்னை உடன் இணைந்து திருவள்ளுவர் சேவா சங்கம் பள்ளி மாணாக்கர்களுக்கு திருக்குறள் நூல் வழங்கும் விழா அரசு நகரவை உயர்நிலைப்பள்ளி சலவன் பேட்டையில் நடைபெற்றது. முதலில் தமிழ் தாய் வாழ்த்து பாடப்பட்டது. லயன் முன்னாள் தலைவர் பெருந்தலைவர் திரு. வே.காமராஜ் அவர்கள் வரவேற்புரை ஆற்றினார். தமிழ் வளர்ச்சி துணை இயக்குநர் அவர்கள் தலைமைத் தாங்கி திருக்குறள் சிறப்பை பற்றி பேசி திருக்குறள் நூல் வழங்கி விழாவை துவக்கி வைத்தார். அவர்களுக்கு செயலாளர் மருத்துவர் அண்ணாமலை சால்வை அணிவித்தார். குறள் மாமுனி முனைவர் ச.ஸ்ரீதர் நிறுவனத் தலைவர் திருக்குறள் வாழ்க்கையின் நெறி என்ற தலைப்பில் வாழ்த்துரை வழங்கினார். பள்ளி தலைமை ஆசிரியர் அனைவருக்கும் சிறப்பு செய்தார். பொருளாளர் திரு. அ. பாஸ்கரன் திருக்குறள் வாழ்வியல் நூல் என்ற தலைப்பில் பேசினார். உதவி தலைமை ஆசிரியர் திருக்குறள் பற்றி சிறப்புரை ஆற்றினார். பூசன் நகர் ஆரம்ப பள்ளி தலைமை ஆசிரியரிடம் எழில் அவர்களிடம் 15 திருக்குறள் நூல் வழங்கப்பட்டது. தமிழ் ஆசிரியர் அவர்களிடம் 50 திருக்குறள் நூல் வழங்கப்பட்டது. திரு. மு.நரசிம்மன் உதவி ஆய்வாளர் செயலாளர் திருக்குறள் பற்றியும் ரஸ்சிய எழுத்தாளர் டால்ஸ்ட்ராய் பற்றி விரிவாக பேசினார். குறள் நெறி காவலர் அ.சுந்தர்ராஜ் துணை தலைவர் ஆகியோர் கலந்து கொண்டனர். கணித ஆசிரியர் இரா. சிவராமன் அனைவருக்கும் நன்றி கூறினார். ஆசிரியர் திரு. சுந்தர் அவர்கள் நாட்டுப்பண் மாணவர்களுடன் பாடினார் விழா இனிதே நிறைவடைந்தது.









# விழுப்புரம் மாவட்டம்

உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கத்தின் வழியே உலகத் தமிழ் வளர்ச்சி மன்றம் வழங்கிய இலவசத் திருக்குறள் நூல்கள் விழுப்புரம் மாவட்ட பொறுப்பாளர் கவிமாமணி துரை.இராசமாணிக்கம் அவர்கள் ஒருங்கிணைப்பில் வழங்கப்பட்டது.

உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம்

மாணவர்களுக்குத் திருக்குறள் நூல்கள் வழங்கும் நிகழ்வின் அழைப்பிதழ்

12.09.2023 செவ்வாய்க்கிழமை முற்பகல் 11.00 மணியளவில்

மாவட்ட நூலக அரங்கம், மாவட்ட ஆட்சியர் அலுவலக வளாகம், விழுப்புரம்.

குறள் நெறி தழைத் தோங்க குரல் கொடுப்போம் வாங்க...!

திருமிகு......................................

**நிகழ்ச்சி நிரல்:**

தமிழ்த்தாய் வாழ்த்து

**தலைமை**

திருமிகு.மு.காசிம் — மாவட்ட நூலக அலுவலர் (பொ) - விழுப்புரம்.

**வரவேற்புரை**

கவிமாமணி சீ.விக்கிரமன் — செயலாளர், அனைத்திந்தியத் தமிழ் எழுத்தாளர்கள் சங்கம் - விழுப்புரம் (மா).

**முன்னிலை**

டாக்டர் சி.மா.பாலதண்டாயுதம் — தலைவர்.தமிழ்ச் சங்கம் - விழுப்புரம்.

கல்வியாளர் இ.சாமிக்கண்ணு — நிறுவுநர், சமூக நீதிப் பாதுகாப்பு இயக்கம் - விழுப்புரம்.

ஆசிரியமாமணி தெ.வே.சஞ்சீவிராயன் — தலைவர்.கவிச்சிங்கம் அர்த்தநாரீச வர்மா பண்பாட்டுப் பேரவை - விழுப்புரம்.

எழுத்தாளர் இரா.இராமமூர்த்தி — நிறுவுநர்.பாரதி சிந்தனைப் புலம் - விழுப்புரம்.

திருமிகு.க.ஞானஜோதி சரவணன் — கம்பன் கழக அறக்கட்டளை - திண்டிவனம்.

திருமிகு.ம.கண்ணன் — தலைவர், குறள்நெறி மன்றம் - விழுப்புரம்.

**மாணவர்களுக்குத் திருக்குறள் நூல்களை வழங்கி நோக்கவுரை**

கவிமாமணி.துரை.இராசமாணிக்கம் — மாவட்ட பொறுப்பாளர், உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம் - திண்டிவனம்.

**வாழ்த்துரை**

திருமிகு.கு.ப.சத்ய பிரியா — துணை இயக்குநர், தமிழ் வளர்ச்சித்துறை - விழுப்புரம் (மா)

திருக்குறள் க.காமராசு — தலைமை முற்றோதல் பயிற்சியாளர் - திருவண்ணாமலை.

மெய்க்கல்வி நல்லாசன் உலக.துரை — செயலர் - பாவேந்தர் பேரவை - விழுப்புரம்.

திருமிகு.ப.முபாரக் அலி — தலைவர்- கண்ணதாசன் நற்பணி மன்றம் - விழுப்புரம்.

கவிஞர் ஆ.இரவி கார்த்திகேயன் — ஒருங்கிணைப்பாளர், மருதம் - விழுப்புரம்.

புலவர். சுந்தர அருணகிரி — பாரதிதாசன் பகுத்தறிவுப் பாசறை - விழுப்புரம்.

முனைவர். தி.க.நாகராசன் — பொருளாளர், அ.இ.தமிழ் எழுத்தாளர்கள் சங்கம் - விழுப்புரம் (மா).

கவிஞர். மான்.கு.ஏழுமலை — நெறியாளர், தமிழ்ச் சங்கம் - திண்டிவனம்.

திருமிகு. ஒ.வ.பலராமன் — திருக்குறள் தொண்டு நிறுவனம் திண்டிவனம்.

பாவலர். தமிழநம்பி — நிறுவுநர் - பாடல் வளாகம்.விழுப்புரம்.

திருமிகு. இல.தட்சிணாமூர்த்தி — ஒருங்கிணைப்பாளர்.தமிழ்ச்சங்கம்.திண்டிவனம்.

திருமிகு. கோ.ஜானகிராமன் — பொருளாளர் - தமிழ்ச்சங்கம்.திண்டிவனம்

திருமிகு. ஆ.ஜீவேந்திர தாசன் — பொருளாளர் - உலகத்திருக்குறள் கூட்டமைப்பு.திண்டிவனம்.

கவிதாயினி. விஜயநந்தினி — உலகத் தமிழ்க் கவிஞர் பேரவை - விழுப்புரம்.

முனைவர். கோ.ராமலிங்கம் — துணைத்தலைவர் -தமிழ்ச்சங்கம்.திண்டிவனம்.

**நன்றியுரை**

திருமிகு. கோ.வெங்கடேசன் — கண்காணிப்பாளர், மாவட்ட மைய நூலகம் - விழுப்புரம்.

**நிரலுரை, நெறியாள்கை**

கவிஞர். மாதவகிருஷ்ணன் — செயலாளர், கவியரசு கண்ணதாசன் நற்பணி மன்றம் - விழுப்புரம்.

நாட்டுப்பண்

கேடில் விழுச்செல்வம் கல்வி யொருவற்கு
மாடல்ல மற்றவை யவை

**திருக்குறள் நூல் பெறும் பள்ளிகள் :**

| ஆசிரியர்கள் : - | பள்ளிகள் : - |
|---|---|
| ஒ.ஆரோக்கிய ராஜ் | நடுநிலைப்பள்ளி, கோனேரிகுப்பம். |
| லாசர் ரமேஷ் | ஒ.பி.ஆர்.அரசு மேல்நிலைப்பள்ளி,ஓமந்தூர். |
| சு.பாஸ்கரன் | அரசு மகளிர் உயர்நிலைப்பள்ளி, மரக்காணம். |
| எஸ்.திலீப் | அரசு மேல்நிலைப்பள்ளி, சத்தியமங்கலம் |
| அருள்மொழிவர்மன் | அரசு நடுநிலைப்பள்ளி, நெடிமோழியனூர். |
| ப.லட்சுமி | அரசு மேல்நிலைப்பள்ளி, வேப்பேரி. |
| பா.சத்தியவேல் | ஒன்றிய நடுநிலைப்பள்ளி, பொன்பத்தி. |
| ஆ.உமா மகேசுவரி | ஒன்றிய நடுநிலைப்பள்ளி, ஜெயங்கொண்டான் |
| சகாய பால்ராஜ் | ஒன்றிய நடுநிலைப்பள்ளி, வடகரைத் தாழனூர். |
| பி.மரிய ஜோசப் | ஒன்றிய நடுநிலைப்பள்ளி, காங்கியனூர். |
| அல்லி ராமதாஸ் | ஒன்றிய நடுநிலைப்பள்ளி, செம்மேடு. |
| மு.முருகன் | ஒன்றிய தொடக்கப்பள்ளி, மழவந்தாங்கல். |
| மகேஸ்வரி | ஒன்றிய தொடக்கப்பள்ளி, கன்னிகாபுரம். |
| பத்மாதேவி | இந்து உதவிபெறும் தொடக்கப்பள்ளி, மேல்சிவிரி |
| இரா.ஜெயந்தி மாலா | ஒன்றிய தொடக்கப்பள்ளி, கோலியனூர். |
| ச.செல்லையா | ஒன்றிய தொடக்கப்பள்ளி, தொரவி. |
| சக்திவேல் | தாய்த்தமிழ் நடுநிலைப்பள்ளி,திண்டிவனம். |
| சத்யா | வாசவி தொடக்கப்பள்ளி, திண்டிவனம். |
| மு.முருகன் | அரசு உயர்நிலைப்பள்ளி, பெரமண்டூர். |
| அ.லில்லி ஏஞ்சல்ஸ் | அரசு ஆதிதிராவிடர் நலத்தொடக்கப்பள்ளி, காடகனூர். |
| ஜி.இராமகிருஷ்ணன் | ஒன்றிய தொடக்கப்பள்ளி, முட்டியூர். |



## மாணவர்களுக்கு திருக்குறள் நூல்கள் அளிப்பு

விழாவில் திருக்குறள் நூல்களை பள்ளித் தலைமை ஆசிரியர்களிடம் வழங்கிய மாவட்ட நூலக அலுவலர் (பொ) மு.காசிம், உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்க மாவட்டப் பொறுப்பாளர் துரை.ராஜமாணிக்கம் உள்ளிட்டோர்.

விழுப்புரம், செப்.12: உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம் சார்பில், அரசுப் பள்ளி, அரசு உதவி பெறும் பள்ளிகளின் மாணவர்களுக்கு திருக்குறள் நூல்கள் வழங்கும் விழா விழுப்புரம் மாவட்ட மைய நூலகத்தில் செவ்வாய்க்கிழமை நடைபெற்றது.

விழாவுக்குமாவட்ட நூலக அலுவலர் (பொ) மு.காசிம் தலைமை வகித்தார். சமூகநீதி பாதுகாப்பு இயக்கத்தின் நிறுவனர் இ.சாமிக்கண்ணு, விழுப்புரம் கவிச்சிங்கம் அர்த்தநாரிச வர்மா பண்பாட்டுப் பேரவைத் தலைவர் தெ.வே. சஞ்சீவிராயன், கம்பன் கழக அறக்கட்டளையைச் சேர்ந்த க.ஞானஜோதி சரவணன் ஆகியோர் முன்னிலை வகித்தனர்.

உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்க மாவட்டப் பொறுப்பாளர் துரை.ராஜமாணிக்கம் விழாவில் பங்கேற்று, அரசு, அரசு உதவி பெறும் பள்ளிகள் என மொத்தம் 22 பள்ளிகளைச் சேர்ந்த 1,200 மாணவர்களுக்காக, அந்தந்த பள்ளிகளின் தலைமை ஆசியர்களிடம் திருக்குறள் நூல்களை வழங்கிப் பேசினார்.

தமிழ் வளர்ச்சித் துறை துணை இயக்குநர் சத்தியபிரியா, திருவண்ணாமலை தலைமை முற்றோதல் பயிற்சியாளர் காமராசு, பாவேந்தர் பேரவைச் செயலர் உலக.துரை, கண்ணதாசன் நற்பணி மன்றத் தலைவர் முபராக் அலி, மருதம் ஒருங்கிணைப்பாளர் ரவி கார்த்திகேயன், தமிழ்ச் சங்க நெறியாளர் ஏழுமலை, திருக்குறள் தொண்டு நிறுவனத்தைச் சேர்ந்த பலராமன் உள்ளிட்ட பலர் வாழ்த்துரை வழங்கினர். நிகழ்வை கவியரசு கண்ணதாசன் நற்பணி மன்றச் செயலர் மாதவகிருஷ்ணன் நெறியாள்கை செய்தார்.

முன்னதாக, அனைத்திந்திய தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் செயலர் விக்கிரமன் வரவேற்றார். மாவட்ட மைய நூலகர் இளஞ்செழியன் நன்றி கூறினார்.

## திருக்குறள் புத்தகம் வழங்கல்

**திண்டிவனம் , செப்.21–**

அமெரிக்காவில் உள்ள உலகத் தமிழ் வளர்ச்சி மன்றம், உலகத் திருக்குறள் முற்றோதல் அமைப்பு மூலம் தமிழகத்தில் உள்ள அரசு மற்றும் அரசு நிதி உதவி பெறும் பள்ளி மாணவர்கள் 1330 திருக்குறள் முற்றோதல் பயிற்சி பெறுவதற்காக புத்தகம் வழங்கி வருகின்றனர்.

இதேபோல் திண்டிவனம், ரோஷணை பகுதியிலுள்ள தாய் தமிழ்ப்பள்ளி மாணவர்களுக்கு திருக்குறள் புத்தகம் வழங்கும் நிகழ்ச்சி நடந்தது.

தமிழ்ச்சங்கத் தலைவர் ராசமாணிக்கம் தலைமையில் நடந்த நிகழ்ச்சியில் திண்டிவனம் தமிழ்ச் சங்க நிர்வாகிகள் ஏழுமலை, பலராமன், ராமலிங்கம், சம்பத், ஜீவேந்திரதாசன், பாண்டியன், கல்வி ஆலோசகர் பிரபாகல்விமணி, தாளாளர் பூபால், தலைமை ஆசிரியர் மரியஅந்தோணி உள்ளிட்டவர்கள் கலந்து கொண்டனர்.

# தென்காசி மாவட்டம்

அரசு மேல்நிலைப்பள்ளி நெடுவயல் அச்சன்புதூர் இன்று 14.09.2023 நடைபெற்ற திருக்குறள் புத்தகம் வழங்கும் விழா நிகழ்வுகள்.



# கடலூர் மாவட்டம்

ஆகஸ்ட் 16, 2023 குள்ளஞ்சாவடி அரசு மேல்நிலைப் பள்ளியில் திருக்குறள் முற்றோதல் நிகழ்ச்சியும் மற்றும் பெண்கள் பாதுகாப்பு விழிப்புணர்வு நிகழ்ச்சி

குள்ளஞ்சாவடி அரசு உயர்நிலைப் பள்ளியில் இன்று திருக்குறள் திருவிழா வெகு சிறப்பாக நடைபெற்றது. பள்ளியின் தலைமை ஆசிரியர் திரு கொளஞ்சியப்பன் அவர்கள் விழாவை தலைமை ஏற்று நடத்தினார். இதில் திருக்குறள் முற்றோதல் நிகழ்ச்சியும் மாணவர்களிடையே திருக்குறள் ஒப்பித்தல் போட்டிகளும் நடத்தப்பட்டது. உலக திருக்குறள் பேரவை மாவட்ட தலைவர் தமிழ் அரிமா திரு. பா.மொ.பாஸ்கரன் அவர்கள் சிறப்பு விருந்தினராக கலந்து கொண்டார். தமிழ் ஆசிரியர்கள் திருமதி. உமா, திரு. ராமநாதன், திருமதி. விஜய சாமுண்டீஸ்வரி ஆகியோர் வெற்றி பெற்ற மாணவ மாணவிகளை தேர்வு செய்து ஒருங்கிணைப்பு செய்தார்கள். உலக திருக்குறள் பேரவை மாவட்ட தலைவர் தமிழ் அரிமா திரு பா மொ பாஸ்கரன் அவர்கள் சான்றிதழ் மற்றும் திருக்குறள் புத்தகங்களை வழங்கி பாராட்டி பேசினார். உலக திருக்குறள் பேரவை செயலாளர் ஆசிரியர் சீ அருள்ஜோதி அவர்கள் வாழ்த்துரை வழங்கினார். திருக்குறள் தொடர்பான வினாடி வினா நிகழ்ச்சியும் நடத்தப்பட்டது. விழா நிகழ்ச்சிகளையும் போட்டிகளையும் சிறப்பாக நடத்தியமைக்காக பள்ளிக்கு நினைவு கேடயம் வழங்கப்பட்டது. பெருவாரியான மாணவர்கள் பெற்றோர்கள் ஊர் பொதுமக்கள் ஆகியோர் கலந்து கொண்டனர். ஆசிரியர் திருமதி கலைவாணி அவர்கள் நன்றி கூற விழா இனிது முடிந்தது நன்றி

கடலூர் நகராட்சி மேல்நிலைப் பள்ளியில் திருக்குறள் திருவிழா



கடலூர் நகராட்சி மேல்நிலைப் பள்ளியில் இன்று திருக்குறள் திருவிழா வெகு சிறப்பாக நடைபெற்றது. பள்ளியின் தலைமை ஆசிரியர் திரு குணசேகரன் அவர்கள் விழாவை தலைமை ஏற்று நடத்தினார். இதில் திருக்குறள் முற்றோதல் நிகழ்ச்சியும் மாணவர்களிடையே திருக்குறள் ஒப்பித்தல் போட்டிகளும் நடத்தப்பட்டது. உலக திருக்குறள் பேரவை மாவட்ட தலைவர் தமிழ் அரிமா திரு பா மொ பாஸ்கரன் அவர்கள் சிறப்பு விருந்தினராக கலந்து கொண்டார். தமிழ் ஆசிரியர் திருமதி புஷ்பலதா மற்றும் உதவி தலைமை ஆசிரியர் திரு மனோகரன் ஆசிரியர்கள் திருமதி சத்தியா திருமதி மீனா ஆகியோர் வெற்றி பெற்ற மாணவர்களை தேர்வு செய்து ஒருங்கிணைப்பு செய்தார்கள். உலக திருக்குறள் பேரவை மாவட்டத் தலைவர் தமிழ் அரிமா திரு பா மொ பாஸ்கரன் அவர்கள் சான்றிதழ் மற்றும் திருக்குறள் புத்தகங்களை வழங்கி பாராட்டிப் பேசினார். உலக திருக்குறள் பேரவை செயலாளர் ஆசிரியர் சீ அருள்ஜோதி அவர்கள் வாழ்த்துரை வழங்கினார். திருக்குறள் தொடர்பான வினாடி வினா நிகழ்ச்சி நடத்தப்பட்டது. விழாவிற்கு பெருவாரியான மாணவர்களும் பெற்றோர்களும் கலந்து கொண்டு சிறப்பித்தனர். இறுதியில் ஆசிரியர் திருமதி இளம்பிறை டெய்சி ராணி அவர்கள் நன்றி கூறினார் மிக்க நன்றி

டி எஸ் பேட்டை அரசு மேல்நிலைப் பள்ளியில் பெண்கள் பாதுகாப்பு மற்றும் திருக்குறள் ஒப்பித்தல் நிகழ்ச்சி.

சிதம்பரம் அருகில் உள்ள டி எஸ் பேட்டை அரசு மேல்நிலைப் பள்ளியில் இன்று திருக்குறள் திருவிழா வெகு சிறப்பாக நடைபெற்றது. பள்ளியின் தலைமை ஆசிரியர் திரு ஜெயவேல் அவர்கள் விழாவை தலைமையேற்று நடத்தினார். இதில் திருக்குறள் முற்றோதல் நிகழ்ச்சியும், மாணவர்களிடையே திருக்குறள் ஒப்பித்தல் போட்டிகளும் நடத்தப்பட்டது. உலக திருக்குறள் பேரவை மாவட்ட தலைவர் தமிழ் அரிமா திரு பா. மொ பாஸ்கரன் அவர்கள் சிறப்பு விருந்தினராக கலந்து கொண்டார். உதவி தலைமையாசிரியர் திருமதி சித்ரா அவர்கள் வெற்றி பெற்ற மாணவ மாணவிகளை தேர்வு செய்து ஒருங்கிணைப்பு செய்தார்கள். உலக திருக்குறள் பேரவை மாவட்ட தலைவர் தமிழ் அரிமா திரு பா. மொ பாஸ்கரன் அவர்கள் சான்றிதழ் மற்றும் திருக்குறள் புத்தகங்களை வழங்கி பாராட்டிப் பேசினார். உலக திருக்குறள் பேரவை செயலாளர் ஆசிரியர் சீ அருள்ஜோதி அவர்கள் வாழ்த்துரை வழங்கினார். திருக்குறள் தொடர்பான வினாடி வினா நிகழ்ச்சியும் நடத்தப்பட்டது. விழாவில் பெருவாரியான மாணவ மாணவிகளும் பெற்றோர்களும் கலந்து கொண்டு சிறப்பித்தனர். இறுதியில் மாணவி நன்றி கூற விழா இனிது முடிந்தது நன்றி.



# திருப்பூர் மாவட்டம்



இந்து தமிழ் திசை 4 KOVAI வெள்ளி, செப்டம்பர் 22, 2023

## சின்னச் சின்னதாய்...

↑ காங்கயம் அரசு பள்ளி மாணவி மெ.சபர்நிகாஸ்ரீ-க்கு பாராட்டு தெரிவித்து பரிசு வழங்கிய தமிழ் வளர்ச்சி மற்றும் செய்தித் துறை அமைச்சர் மு.பெ.சாமிநாதன்

### திருக்குறள் முற்றோதல் போட்டியில் அரசு பள்ளி மாணவிக்கு அமைச்சர் பரிசு

● திருப்பூர்

தமிழ் வளர்ச்சித் துறை சார்பில் நடந்த திருக்குறள் முற்றோதல் போட்டியில், 1330 திருக்குறளையும் மனப்பாடமாக ஒப்புவித்த காங்கயம் அரசு மேல்நிலைப் பள்ளியின் 9– வகுப்பு மாணவி மெ.சபர்நிகாஸ்ரீ உட்பட கோவை, ஈரோடு, நீலகிரி மாவட்டங்களை சேர்ந்த 5 மாணவ, மாணவிகளுக்கு, திருப்பூர் மாவட்டம் செங்கப்பள்ளியில் நடந்த நிகழ்ச்சியில் தமிழ் வளர்ச்சி மற்றும் செய்தித் துறை அமைச்சர் மு.பெ.சாமிநாதன் பரிசு வழங்கினார்.

முற்றோதல் நிகழ்த்தியவர்களின் சாதனையை பாராட்டி சான்றிதழ் மற்றும் ரூ.15 ஆயிரத்துக்கான காசோலை வழங்கப்பட்டது. பரிசு பெற்ற மாணவியை பள்ளித் தலைமை ஆசிரியர் மற்றும் ஆசிரியர்கள் பாராட்டினர்.

அகவை முதிர்ந்த தமிழறிஞர்கள் உதவித்தொகை பெறும் 39 பேருக்கு, இலவசப் பேருந்து பயணச் சலுகை ஆணைகளையும் அமைச்சர் வழங்கினார்.

தமிழ் வளர்ச்சித் துறை துணை இயக்குநர் (பொ), புவனேசுவரி, திருப்பூர் மாநகராட்சி 4-ம் மண்டலத் தலைவர் இல.பத்மநாபன், ஊத்துக்குளி ஊராட்சி ஒன்றியக் குழுத் தலைவர் பிரேமா ஈஸ்வரமூர்த்தி உட்பட பலர் பங்கேற்றனர்.

ஞா.ச.சந்தோஷ் திருக்குறள் முற்றோதல் போட்டியில் தேர்வு செய்யப்பட்டு பரிசினை மாண்புமிகு முதலமைச்சர் இன்று (30/06/2023) வழங்கினார்.



# கோயம்புத்தூர் மாவட்டம்

தி.வி.ஆதித்யன் (அபுதாபி) கோயம்புத்தூர் மாவட்டம் (19.09.2023) இன்று பரிசு வழங்கப்பட்டது.



# மயிலாடுதுறை மாவட்டம்

மயிலாடுதுறைத் திருக்குறள் பேரவையின் ஒன்பதாம் ஆண்டுவிழா சிறப்பாக நடைபெற்றது. இதன் தலைவர் தமிழ்ச்செம்மல் முனைவர்.சி.சிவசங்கரன், செயலாளர் நல்லாசிரியர் இரா.செல்வகுமார், இணைச்செயலாளர் முனைவர். துரை.சந்தானலெட்சுமி, பேரவை நெறியாளர் முதுபெரும் வழக்கறிஞர் நா.கு.கிருட்டிணமூர்த்தி ஆகியோர் மிகப்பெரிய அளவில் ஏற்பாடுசெய்திருந்தனர்.

இந்நிகழ்வில் உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம் மூலம் உலகத் தமிழ் வளர்ச்சி மன்றம் வழங்கும் இலவசத் திருக்குறள் நூல்கள் மயிலாடுதுறை மாவட்ட திருக்குறள் பேரவையின் மூலம் அரசுப்பள்ளி தலைமையாசிரியர்களுக்கு வழங்கப்பட்டது. மயிலாடுதுறை மாவட்டத்தில் திருக்குறள் முற்றோதல் நடத்த இடமும், ஒரு பயிற்சியாளருக்கு மாதாந்திர ஊக்கத்தொகையும் வழங்க முன்வந்துள்ள திருக்குறள் புரவலர் ஜெனிஃபர் ஸ்வீட்ஸ் திரு.ஜெனிஃபர் பவுல்ராஜ் அவர்கள் கலந்துகொண்டு நூல்களை வழங்கினார்.

உலகப் பொதுமறை திருக்குறள்

திருவள்ளுவரைப் போற்றுவோம்! திருக்குறள் நெறி பரப்புவோம்!!



**மயிலாடுதுறைத் திருக்குறள் பேரவை,**

(தொடக்கம் 25. 12. 2011)

வள்ளுவர்கோட்டம், 31. விசித்திராயர்வீதி, மயிலாடுதுறை – 609 001.

நாள் : **24.09.2023 - ஞாயிறு** நேரம் : **மாலை 4.45 மணி**

இடம் : **கோவிந்தம்மாள் திருமண மண்டபம்,** மயிலாடுதுறை.

**நிகழ்ச்சி நிரல்** **பரதநாட்டியம் - திருக்குறள் இசை**

**மாலை 5.30 மணி :**

தமிழ்த்தாய் வாழ்த்து : முனைவர் **துரை.சந்தானலெட்சுமி** இணைச்செயலாளர்

வரவேற்புரை : நல்லாசிரியர் **இரா.செல்வக்குமார்** அவர்கள், செயலாளர்

தலைமையுரை : 'தமிழ்ச்செம்மல்' முனைவர் **சி.சிவசங்கரன்** அவர்கள், தலைவர்

வாழ்த்துரை : முதுபெரும் வழக்கறிஞர் **நா.கு.கிருட்டிணமூர்த்தி** பேரவை நெறியாளர்

**உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம் சார்பில் பள்ளிகளுக்குத் திருக்குறள் நூல் வழங்குதல் & பரிசளிப்பு**

திரு. **வே. மாணிக்கவேல்** அவர்கள், உதவித் தொடக்கக்கல்வி அலுவலர், குடவாசல்
'தமிழ்ச்செம்மல்' திரு. **எஸ்.பவுல்ராஜ்** ஜெனிஃபர் இனிப்பகம்,
நிறுவனர், மயிலாடுதுறைத் தமிழ்ச்சங்கம்

**பள்ளிகள் :**

1. **ஊராட்சி ஒன்றிய நடுநிலைப்பள்ளி,** ஓதவந்தான்குடி.
2. **ஊராட்சி ஒன்றிய நடுநிலைப்பள்ளி,** தாண்டவன்குளம்.
3. **ஊராட்சி ஒன்றிய நடுநிலைப்பள்ளி,** மத்தளமுடியன்.
4. **ஊராட்சி ஒன்றிய நடுநிலைப்பள்ளி,** கொடக்காரமூலை.
5. **ஊராட்சி ஒன்றிய நடுநிலைப்பள்ளி,** கீழப்பெரும்பள்ளம்.

**திருக்குறள் ஒப்புவித்தல் பரிசுபெறும் மாணவர்கள்**

1. **பா.சுபஸ்ரீ** ... V
2. **அ.சாய்சரண்** ... V
3. **ஆ.தர்ஷினி** ... VI
4. **சி.சிவரஞ்சனி** ... VI
5. **பா.சக்திசரவணன்** ... VII

**ஸ்ரீ வாணிவிலாஸ் நடுநிலைப்பள்ளி,** செருதியூர்.

தீர்மானங்கள் முன்மொழிதல் } திருமிகு **ந.செ.இளமுருகுசெல்வன்** அவர்கள் கருத்தரங்க அமைப்பாளர்.

தீர்மானங்கள் வழிமொழிதல் } திருமிகு **நா.இமயவரம்பன்** அவர்கள் இணைசெயலாளர்

தொடக்கவுரை : முனைவர் **ப.வண்டார்குழலி** அவர்கள்
உதவிப் பேராசிரியர், அரசு மகளிர் கல்லூரி, காரைக்கால்.
தலைப்பு : **"மருந்தென வேண்டாவாம்"**

மகிழ்வுரை : திருமிகு. **எம்.அப்துல்ரகுமான்** அவர்கள்
வேலூர் மேனாள் நாடாளுமன்ற உறுப்பினர் – வஃக்பு வாரியத் தலைவர்.

நிறைவுப்பேருரை : அருட்டிரு. **ம.ஜெகத்கஸ்பர்** அவர்கள்
நிறுவனர், பசுமைபூமி, சென்னைத் தமிழ் மையம்.
தலைப்பு : **"வையத்தின் அறவாயில் வள்ளுவம்"**

நன்றியுரை : திரு. **சு.இராமச்சந்திரன்** அவர்கள், பொருளாளர்.

# திருக்குறள் பேரவை ஆண்டு விழா



விழாவில் பேசிய வக்பு வாரியத் தலைவர் எம். அப்துல்ரஹ்மான். உடன், சென்னை தமிழ் மைய நிறுவனர் ம.ஜெகத்கஸ்பர், திருக்குறள் பேரவைத் தலைவர் சி. சிவசங்கரன் உள்ளிட்டோர்.

**மயிலாடுதுறை, செப். 24:** மயிலாடுதுறை திருக்குறள் பேரவையின் 9-ஆம் ஆண்டு விழா ஞாயிற்றுக்கிழமை நடைபெற்றது.

பேரவைத் தலைவர் சி. சிவசங்கரன் தலைமை வகித்தார். பேராசிரியர் துரை.சந்தானலெட்சுமி தமிழ்த்தாய் வாழ்த்து பாடினார். பேரவை நெறியாளர் வழக்குரைஞர் நா.கு.கிருட்டிணமூர்த்தி வாழ்த்துரை வழங்கினார். காரைக்கால் அரசு மகளிர் கல்லூரி உதவிப் பேராசிரியர் ப.வண்டார்குழலி, 'மருந்தென வேண்டாவாம்' என்ற தலைப்பில் தொடக்கவுரை ஆற்றினார்.

விழாவில், வக்பு வாரியத் தலைவரும், வேலூர் மக்களவை முன்னாள் உறுப்பினருமான எம். அப்துல்ரஹ்மான் மகிழ்வுரை ஆற்றினார். தொடர்ந்து, பசுமை பூமி, சென்னை தமிழ் மைய நிறுவனர் ம. ஜெகத்கஸ்பர் 'வையத்தின் அறவாயில் வள்ளுவம்' என்ற தலைப்பில் நிறைவுரை ஆற்றினார்.

விழாவில், உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம் சார்பில் பல்வேறு பள்ளிகளின் தலைமை ஆசிரியர்களுக்கு திருக்குறள் நூல் வழங்கப்பட்டது. ஆசிரியர் வீதி.முத்துக்கணியன் நிகழ்ச்சியை தொகுத்து வழங்கினார். இதில், மயிலாடுதுறை தமிழ்ச் சங்க நிறுவனர் ஜெனிபர் ச.பவுல்ராஜ் உள்ளிட்ட தமிழார்வலர்கள், தமிழறிஞர்கள் பலர் கலந்து கொண்டனர். பேரவை செயலர் இரா. செல்வகுமார் வரவேற்றார். பேரவை பொருளாளர் சு.ராமச்சந்திரன் நன்றி கூறினார்.





திருவள்ளுவரைப் போற்றுவோம் ! திருக்குறள் நெறி பரப்புவோம் !!



"பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்..."

**மயிலாடுதுறைத் திருக்குறள் பேரவை**
**ஒன்பதாம் ஆண்டு விழா அழைப்பிதழ்**

நாள் : திருவள்ளுவர் ஆண்டு 2054 கன்னித்திங்கள் (புரட்டாசி) 7-ஆம் நாள்
**24-09-2023 ஞாயிற்றுக்கிழமை மாலை 4-15 - 8-30 மணி**
இடம் : **கோவிந்தம்மாள் திருமணக் கூடம்,** பட்டமங்கலத்தெரு, மயிலாடுதுறை.

**வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து**
**வான்புகழ் கொண்ட தமிழ்நாடு - பாரதியார்.**

இனிய தமிழ்ச்சான்றோர் பெருமக்களே! தமிழ் ஆர்வலர்களே! திருக்குறள் பற்றாளர்களே! நண்பர்களே! அனைவரையும் வணங்கி மகிழ்கிறோம்.

உலகப் பொது மறையாம் திருக்குறளை இயற்றிய திருவள்ளுவர் பெருமகனாரைப் போற்றிடவும், திருக்குறள் அறநெறியைப் பரப்புரை செய்திடவும், தொடங்கப்பெற்ற மயிலாடுதுறைத் திருக்குறள் பேரவையின் ஒன்பதாம் ஆண்டு விழா, சீரும் சிறப்புமாக நடைபெற உள்ளது.

பேரவைத் தலைவர் முனைவர் **சி. சிவசாங்கரன்** அவர்கள் தலைமையில் நடைபெறும் இவ்வினிய விழாவில் முதுபெரும் வழக்கறிஞர் அரிமா. **நா.கு. கிருட்டிணமூர்த்தி** அவர்கள் வாழ்த்துரை வழங்கவும், காரைக்கால் அரசு மகளிர் கல்லூரி உதவிப் பேராசிரியர் முனைவர். **ப. வண்டார்குழலி** அவர்கள் விழாவினைத் தொடங்கி வைத்து உரை நிகழ்த்தவும், மேனாள் வேலூர் நாடாளுமன்ற உறுப்பினர், வக்பு வாரியத்தலைவர் திரு. **எம். அப்துல்ரகுமான்** அவர்கள் மகிழ்வுரை வழங்கவும்,

**சென்னைத் தமிழ் மையம் - பசுமைபூமி நிறுவனர்**

அருட்டிரு. **ம.ஜெகத்கஸ்பர்** அவர்கள் நிறைவுப்பேருரை ஆற்றவும் அன்புடன் இசைந்துள்ளார்கள். சீரிய இவ்விழாவில் தாங்கள் கலந்து கொண்டு சிறப்பிக்க மகிழ்வுடன் அழைக்கின்றோம்.

அன்புடன்,

விழாக்குழுவினர், பொறுப்பாளர்கள்

**மயிலாடுதுறைத் திருக்குறள் பேரவை.**

இணையதள முகவரி : www.mayiladuthuraithirukkuralperavai.com






# திருச்சி மாவட்டம்




திருக்குறள் ஒப்பித்த 12 மாணவ மணிகட்கும் வெள்ளிப் பதக்கங்கள் வழங்கப்பட்டன.



உலகத் திருக்குறள் முற்றோதல் மையத்தின் திருச்சிராப்பள்ளி மாவட்ட ஒருங்கிணைப்பாளர் திரு பூவை தயாபரன் ஐயா அவர்கள் பூவாளூர் அரசு மேல்நிலைப்பள்ளிக்கான புரவலர் நிதி ₹10000 வழங்கினார்.

# புதுக்கோட்டை மாவட்டம்

புதுக்கோட்டை மாவட்டத்தில் உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்க நிகழ்வு. உலகத் தமிழ் வளர்ச்சி மன்றத்தின் மூலம் இலவசத் திருக்குறள் நூல்கள் வழங்கும் நிகழ்வு.

**விருது அரங்கத்தின் விதிமுறைகள் :**

- விழா அரங்கிற்குள் காலை 9.00 மணிக்குள் வந்துவிடவேண்டும்.
- டெங்கு காய்ச்சல் மற்றும் மர்ம காய்ச்சல் அச்சம் முற்றிலும் விடுபடாததால் அனைத்து ஆசிரியப் பெருமக்களும் அரசு விதிமுறைகளை கடைப்பிடிக்கவும்.
- பெயர்ப் பதிந்து அறக்கட்டளை வழங்கியுள்ள தங்களின் எண் எதுவோ அவற்றில்தான் கையொப்பமிட வேண்டும். அதே எண், இருக்கையில் தங்களின் சான்றிதழ் மற்றும் விருதினை எடுத்துக்கொண்டு அமர வேண்டும்.
- குழந்தைகள், உறவினர்கள் ஆகியோருக்கு தனி இருக்கை போடப்பட்டிருக்கும்.
- விழா அரங்கிற்குள் யாரும் போட்டோ எடுக்க அனுமதியில்லை.
- அனைவருக்கும் போட்டோ எடுத்துக்கொள்ள ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.
- அமைதியைக் கடைப்பிடிப்பது தான் முக்கிய அம்சம்.
- பேச்சாளர் சகோதரர்கள் யாரும் 5 நிமிடத்திற்கு மேல் பேச மாட்டார்கள். ஏற்புரை வழங்குபவர்கள் சிறிய குறிப்போடு வந்து வாசித்தல் நல்லது.
- காலம் கருதி நம் சமூகச் சான்றோர்கள் மற்றும் விழாவில் சிலர் வரக் காலதாமதமானாலும் விழாக் குறிப்பிட்ட நேரத்தில் தொடங்கும்.
- அனைவருக்கும் மதிய உணவு ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.
- அனைவரும் ஒத்துழைக்க வேண்டுகிறோம்.

நிகழ்ச்சி ஏற்பாடு :



**குறள் நெறிப் பதிப்பகம்**
**அம்பிகா கல்வி அறக்கட்டளை**
ப.எண். 192/2005, 1340, கம்பன் நகர், இராஜகோபாலபுரம், புதுக்கோட்டை-622 003.

12

திருக்குறள் கற்போம் ! குறள்வழி நடப்போம் !





**அம்பிகா கல்வி அறக்கட்டளை**யின்

**ஐம்பெரும் விழா**

அழைப்பிதழ்

நாள் : **01.10.2023 ஞாயிற்றுக்கிழமை** நேரம் : காலை 9.00 மணி

இடம் : **நாடார் உறவின் முறை திருமண மண்டபம்,**
தலைமை தபால் நிலையம் அருகில், புதுக்கோட்டை.

முதல் வணக்கம் : தமிழ்த்தாய் வாழ்த்து

குறள் வணக்கம் : பொன்மாரி ஆசிரியர்கள்

வரவேற்புரை : திரு. Dr. **R.பீட்டர்** M.D.,D.M.(Neonatology) அவர்கள்
அம்பிகா கல்வி அறக்கட்டளை, புதுக்கோட்டை

தலைமை : ஞானாலயா திரு. **பா.கிருஷ்ணமூர்த்தி** அவர்கள்
முதன்மை ஆலோசகர், அம்பிகா கல்வி அறக்கட்டளை, புதுக்கோட்டை

முன்னிலை :

திரு. **ரமேஷ்** அவர்கள்
மாவட்டக் கல்வி அலுவலர், புதுக்கோட்டை

திரு. **அறிவொளி தனபாலன்** அவர்கள்
மாவட்டக் கல்வி அலுவலர், (தனியார் பள்ளிகள்), புதுக்கோட்டை

திருமதி. **டோரதி கிருஷ்ணமூர்த்தி** அவர்கள்
ஞானாலயா நூலகம், புதுக்கோட்டை

திரு. **K.T.கந்தசாமி** அவர்கள்
தாளாளர், எய்ம்ஸ் பள்ளி, புதுக்கோட்டை

திருமதி. **ராஜேஸ்வரி** அவர்கள்
மாவட்டக் கல்வி அலுவலர், அறந்தாங்கி

திரு. **இராஜேந்திரன்** அவர்கள்
மாவட்ட தொடக்கக் கல்வி அலுவலர் (பொறுப்பு), புதுக்கோட்டை

திரு. **G.S.தனபதி** அவர்கள்
அகில இந்திய விவசாயிகள் சங்கம், புதுக்கோட்டை

திருமதி. **மணிமேகலை ஜெயராமன்** அவர்கள்
தலைவர், தமுஎகச மகளிர் அணி, புதுக்கோட்டை

மற்றும் **அனைத்து தொடக்கக் கல்வி அலுவலர்கள், கல்வித்துறைச் சான்றோர்கள்**

**சமூக சான்றோர் விருது,**
**அர்ப்பணிப்பு ஆசிரியர் விருது** மற்றும்
**இலட்சிய ஆசிரியர் விருது 2023**

விழா மலர் வெளியீடு :

கல்விப்பணிச்செம்மல், முனைவர். **சாமி.சத்தியமூர்த்தி** அவர்கள்
முதன்மைக் கல்வி அலுவலர் (பணி நிறைவு) புதுக்கோட்டை மாவட்டம்

முதல் பிரதியை பெறுபவர் :

கல்விச்சேவைச் செம்மல், உயர்திரு. **S.சிவாஜி** அவர்கள்
முதன்மைக் கல்வி அலுவலர் (பணி நிறைவு) புதுக்கோட்டை மாவட்டம்

**உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம்** நடத்தும்
**தமிழக தமிழ் வளர்ச்சி கழகத்தின்**
அரசுப் பள்ளி மாணவர்களுக்கான
**தமிழக அரசு ஊக்கத்தொகையாக வழங்கும் ரூ. 15,000/-க்கான**
**திருக்குறள் ஒப்புவித்தல் நிகழ்ச்சிக்காக**
**உலக தமிழ் வளர்ச்சி மன்றம்** அன்பளிப்பாக வழங்கிய
திருக்குறள் புத்தகங்களை அரசுப்பள்ளி ஆசிரியர்களிடம் வழங்குதல் மற்றும்

இலட்சிய ஆசிரியர்களை வாழ்த்திச் சிறப்புரை :

திருமதி. **மா.மஞ்சுளா** B.Sc.,M.A.,M.Ed., அவர்கள்
மாவட்ட முதன்மைக் கல்வி அலுவலர்
புதுக்கோட்டை மாவட்டம்

சிறப்பு விருந்தினர்களைச் சிறப்பு செய்தல் :

**அம்பிகா கல்வி அறக்கட்டளை குழுவினர்**

..2..

வேண்டல் :

**விழாவினைச் சிறப்பித்து தர அனைவரும் வருக !**

நன்றியுரை :

முனைவர். **R.செந்தமிழ்வீணா** Ph.D.,
செயற்குழு உறுப்பினர், அம்பிகா கல்வி அறக்கட்டளை

நிகழ்ச்சித் தொகுப்பு :

திருமிகு. **ம.சந்திரா ரவீந்திரன்** M.A.,M.Phil.,
இயக்குநர், அம்பிகா கல்வி அறக்கட்டளை

திருமிகு. **வி.ஜெயராணி** M.A.,B.Ed.,
செயற்குழு உறுப்பினர், அம்பிகா கல்வி அறக்கட்டளை

நிகழ்ச்சி ஏற்பாடு :

Dr. **A.இரவீந்திரன்** M.S.,D.L.O.,
நிறுவனர், அம்பிகா கல்வி அறக்கட்டளை

Dr. **R.முத்தமிழ்வீணா** M.D.,(Pharm)
அம்பிகா கல்வி அறக்கட்டளை

நிகழ்ச்சி ஒருங்கிணைப்பு :

**பொன்மாரி மெட்ரிக் பள்ளி ஆசிரியர்கள்**

...நாட்டுப்பண்...

அறிவினான் ஆகுவதுண்டோ பிறிதின்நோய்
தந்நோய்போல் போற்றாக் கடை குறள்-315

போட்டோ தேவைப்படுவோர் அணுக வேண்டியது...
**உல்லாஸ் போட்டோஸ், பெரம்பலூர். கைபேசி எண் : 98426 71768**
உடனுக்குடன் போட்டோ எடுத்து அரங்கத்திற்குள்ளேயே வழங்கப்படும்.

..11..

# திருநெல்வேலி மாவட்டம்

சொக்கலால் மேல்நிலைப்பள்ளிக்கு 25 திருக்குறள் புத்தகங்கள் வழங்கப்பட்டது. திருநெல்வேலி மாவட்டம், சொக்கலால் மேல்நிலைப்பள்ளி, முக்கூடல் பள்ளிக்கு வழங்கப்பட்டு திருக்குறளை பயிற்றுவிக்க ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.



திருநெல்வேலி மாவட்டம், கல்லிடைக்குறிச்சி, திலகர் வித்யாலயம் பள்ளியில் வைத்து திருக்குறள் முற்றோதல் தொடக்கவிழா நடைபெற்றது.





கல்லிடைக்குறிச்சி திலகர் பள்ளியில் திருக்குறள் முற்றோதல் பயிற்சி துவக்க விழாவில் துபாய், எம்.என்.சி., நிறுவன மேலாளர் ரவி சொக்கலிங்கம் பேசினார்.

## மாணவர்கள் கல்விக்கு முக்கியத்துவம் கொடுக்க வேண்டும்

### துபாய் எம்.என்.சி., நிறுவன மேலாளர் அட்வைஸ்

அம்பாசமுத்திரம், ஆக. 5–

அம்பாசமுத்திரம் ஈஸ்ட் ரோட்டரி சங்கம், சர்வீஸ் டூ சொசைட்டி (எஸ்.2.எஸ்) டிரஸ்ட் மற்றும் உலக திருக்குறள் முற்றோதல் இயக்கம் சார்பில் கல்லிடைக்குறிச்சி திலகர் வித்யாலயா மேல் நிலைப்பள்ளியில் திருக்குறள் முற்றோதல் பயிற்சி துவக்க விழா நடந்தது.

இந்நிகழ்வை, அம்பாசமுத்திரம் ஈஸ்ட் ரோட்டரி சங்க தலைவர் ஆதம் இல்யாஸ் துவக்கி வைத்தார். செயலாளர் வக்கீல் நவமணி ரோட்டரி இறைவணக்கம் கூறினார். பள்ளி தலைமையாசிரியர் பண்டாரசிவன் வரவேற்றார்.

சிறப்பு விருந்தினராக பங்கேற்ற துபாய், எம்.என்.சி., நிறுவனத்தின் மூத்த தர கட்டுப்பாடு மேலாளர் ரவி சொக்கலிங்கத்தை ரோட்டரி பொருளாளர் [illegible] முகப்ப [illegible] தன்னம்பிக்கை பேச்சாளரான துபாய், எம்.என்.சி., நிறுவன மேலாளர் ரவி சொக்கலிங்கம் மாணவர்களுக்கு திருக்குறள் புத்தகங்களை வழங்கி 'என்னால் முடியும்' என்ற தலைப்பில் மாணவர்கள் மத்தியில் பேசினார்.

அவர் பேசியதாவது:

"மாணவ பருவத்தில் கல்விக்கு மட்டுமே முக்கியத்துவம் கொடுக்க வேண்டும். வாழ்க்கையில் உயர, ஜெயிக்க, சாதனை புரிய படிப்பு அவசியம்."

இவ்வாறு அவர் பேசினார்.

ஆசிரியர்கள் இசக்கியப்பன், சந்தோஷ் தொகுத்து வழங்கினர். உதவி தலைமையாசிரியர் பால்சாமி நன்றி கூறினார்.

**ஆண்டுக்கு 80 ஆயிரம் திருக்குறள் புத்தகம் வழங்க இலக்கு !**

உலக திருக்குறள் முற்றோதல் இயக்கம், பள்ளிக் கல்வி துறையுடன் இணைந்து அனைத்து மாணவர்களும் திருக்குறளை பொருளுடன் படித்து அதன் வழியில் நடக்க வேண்டும் என்ற நோக்கத்தில் மாணவர்களுக்கு திருக்குறள் புத்தகங்களை வழங்கி வருகிறது.

ஓராண்டில் மாவட்டத்திற்கு 2 ஆயிரம் வீதம் புதுச்சேரியையும் சேர்த்து 40 மாவட்டங்களில் 80 ஆயிரம் புத்தகங்களை வழங்க இலக்கு நிர்ணயிக்கப்பட்டு, இது வரை 30 ஆயிரம் புத்தகங்கள் வழங்கப்பட்டுள்ளன. பள்ளிகளில் 181வது நிகழ்வாக நேற்று நடந்தது.




# புதுச்சேரி




புதிவைச் தமிழ்ச்சங்கத்துடன் இணைந்து உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம் நேரடி வகுப்புகளை நடத்த தொடக்கவிழா நடந்தது. அதில் கலந்துகொண்ட மாணவர்களுக்கு வழங்கப்பட்ட சான்றிதழ்.. இயக்கத்தின் புதுவை மாநிலப் பயிற்சியாளர் குறளரசி சங்கீதா கண்ணன் தமிழ்ச்சங்க நிர்வாகிகளுடன் சான்றிதழில் கையொப்பமிட்டு வழங்கினார்.



உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கத்தின் பயிற்சியாளர் திருமதி.சங்கீதா கண்ணன் அவர்கள் கண்ணன் புச்ச்சேரி மாவட்ட தமிழ்ச்சங்கத் தலைவர் திரு.முத்து மற்றும் திரு.திருநாவுக்கரசு பழனி ஆகியோரை சந்தித்து புதுவையில் முற்றோதல் தொடக்கவிழா குறித்து உரையாடியபோது..

(31.08.23) (திருமிகு. சிவ மாதவன் ஐயா அவர்களின் அழைப்பில்) புதிமம் அமைப்புடன் இணைந்து SR சுப்ரமணியன் அரசு உயர்நிலைப்பள்ளியில் திருக்குறள் முற்றோதல் (அறத்துப்பால்) பயிற்சி நடத்தப்பட்டது.



புதுவைத் தமிழ்ச்சங்கத்துடன் இணைந்து உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம், உலகத் தமிழ் வளர்ச்சி மன்றம் இலவச திருக்குறள் நூல் வழங்கி, இலவச முற்றோதல் பயிற்சியை வழங்க தொடக்கவிழா நடைபெற்றது. தமிழ்நாட்டின் பிற தமிழ்ச்சங்கங்கள், திருக்குறள் அமைப்புகள் உங்கள் பகுதியில் திருக்குறள் முற்றோதல் பயிற்சியை வழங்க தொடர்புகொள்ளவும், உங்கள் மாவட்டத் தொடர்பாளர் ஏற்பாடு செய்வார். உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கத்தின் புதுவை மாநிலப் பயிற்சியாளர் குறளரசி.சங்கீதா கண்ணன் நேரடி வகுப்புகளை ஒருங்கிணைக்கிறார்.

திருக்குறள் வழியில் ஒரு அறம்சார்ந்த, உயர்ந்த மாணவச் சமுதாயத்தை உருவாக்குவோம்..

உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம்.

# புதுவைத் தமிழ்ச்சங்கம்

எண். 2, தமிழ்ச்சங்க வீதி, வெங்கட்டா நகர், புதுச்சேரி - 605 011.

பதிவெண் : 1/1958

நாள் : 26-08-2023, காரிக்கிழமை (சனி) மாலை 6.00 மணி
திருவள்ளுவர் ஆண்டு 2054, மடங்கல் - 9 ஆவணி
இடம் : புதுவைத் தமிழ்ச் சங்கம் (குளிர்மை அரங்கு)

## விடுதலைநாள் விழா, திருக்குறள் முற்றோதல் தொடக்க விழா

## அழைப்பிதழ்

தமிழ்த்தாய் வாழ்த்து

நாட்டிய நாடகம்
புதுச்சேரிக் கலைமாமணி மா.சு. இராஜா-வின் கண்மணி கிரியேஷன்ஸ் வழங்கும்
**"வீரமங்கை வேலுநாச்சியார் நாட்டிய நாடகம்"**
வழங்குபவர் : தேசிய விருது பெற்ற நாடக மாமணி, **கே. விஜி (எ) வீரம்மாள்**

தலைமை

கலைமாமணி முனைவர் **வி. முத்து**
தலைவர், புதுவைத் தமிழ்ச்சங்கம்

வரவேற்புரை

ஆசிரியர் செம்மல் பாவலர் **சீனு. மோகன்தாசு**
செயலர், புதுவைத் தமிழ்ச்சங்கம்

முன்னிலை

தமிழ்மாமணி **ந. ஆதிகேசவன்**
துணைத்தலைவர், புதுவைத் தமிழ்ச்சங்கம்

பாவலர் **மு. அருள்செல்வம்**
பொருளாளர், புதுவைத் தமிழ்ச்சங்கம்

பாவலர் **ப. திருநாவுக்கரசு**
துணைத்தலைவர், புதுவைத் தமிழ்ச்சங்கம்

பாவலர் **தெ. தினகரன்**
துணைச் செயலர், புதுவைத் தமிழ்ச்சங்கம்

சிறப்புரை :

குறளரசி. **சங்கீதா கண்ணன்**
திருக்குறள் பயிற்றுநர்
உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம்
தலைப்பு : **இல்லறப் பெண்களுக்கு நல்லறம் காட்டும் வள்ளுவம்**

நன்றியுரை

பாவலர். **ர. ஆனந்தராசன்**, ஆட்சிக்குழு உறுப்பினர்

ஆட்சிக்குழு உறுப்பினர்கள் :
தமிழ்மாமணி, முனைவர் **அ. உசேன்**, கலைமாமணி **மா.சு. இராசா**
பொறிஞர். **மு. சுரேசுகுமார்**, **அ. சிவேந்திரன்**

அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு. குறள்

## திருக்குறள் முற்றோதல் இயக்க குறிக்கோள்கள்

1. புதுச்சேரியில் 1330 திருக்குறளையும் மனனம் செய்யும் மாணவர்களை அதிக அளவில் உருவாக்கி, அறம் சார்ந்த, பொருள் வளம்மிக்க நல்லிணக்க சமுதாயத்தைக் உருவாக்குதல்.
2. பள்ளித் தலைமை ஆசிரியர்கள், ஆசிரியர்கள் பெற்றோர்களுடன் இணைந்து செயல்பட்டு ஆர்வமும் மனனம் செய்யும் திறனும் மிக்க மாணவர்களை இனம் கண்டு, அவர்களுக்குத் திருக்குறள் முற்றோதல் மனனப் பயிற்சி அளித்தல்.
3. வயதுக்கு ஏற்ப, திருக்குறளின் பொருளை முற்றோதல் முடித்த அனைவரும் கல்லூரி செல்வதற்கு முன்பு முழுமுமையாக அறிந்துகொள்ள வழிவகைசெய்தல்.
4. திருக்குறள் முற்றோதல் பயிற்றுவிக்க புதுச்சேரியின் அனைத்து பகுதிகளிலும் தகுதியான அறம் சார்ந்த, அனுபவமும் ஆர்வமும் மிக்க முற்றோதல் முடித்த பயிற்சியாளர்களை அடையாளம் கண்டு, பொறுப்பாளர்களாக நியமித்தல்.
5. ஒவ்வொரு ஆண்டும் திருவள்ளுவர் நாளில், திருக்குறள் முற்றோதல் முடித்தவர்கள் புதுச்சேரியில் உள்ள புதுவைத் தமிழ்ச் சங்க திருவள்ளுவர் சிலையின் முன் நின்று முற்றோதல் செய்து கற்றதை மறந்துவிடாமல் தொடர் பயிற்சி செய்தல்.
6. குறள் முற்றோதல் முடித்த அனைவரின் விவரங்களையும் இணையத்தில் பட்டியலிட்டு, வரிசை எண் கொடுத்து அவர்கள் ஒருங்கிணைந்த வளர்ச்சியை, வெற்றியைப் பெற துணைநிற்றல்.
7. குறள் முற்றோதல் முடித்த அனைவரும் ஒருவருக்கொருவர் துணை நின்று கல்வி, வேலைவாய்ப்பு, மகிழ்ச்சியான, நிறைவான வாழ்க்கையை வாழவும், தொழிலில் வெற்றிபெறவும் முன்னுரிமை கொடுத்து அவர்களக்கு உரிய உதவிகளை ஒட்டு மொத்த உலகத் தமிழர்கள் தங்களது ஒருங்கிணைந்த தலையாய பொறுப்பாக ஏற்று செயல்பட வழிவகுத்தல்.
8. ஆங்காங்கு உள்ள தமிழ் அமைப்புகளுடன் கைகோர்த்து குறிப்பிட்ட எண்ணிக்கை முடித்தவர்களுக்கு, முற்றோதல் இளநிலை, முதுநிலை முடித்தவர்களுக்கு சான்றிதழை வழங்குதல்.
9. புதுவைத் தமிழ்ச் சங்கம் உலகத் தமிழ் வளர்ச்சி, உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம் உள்ளிட்ட அமைப்புகளுடன் இணைந்து இலவசமாக திருக்குறள் நூல்களை மாணவர்களுக்கு வழங்குதல்.
10. மாணவர்களிடம் தமிழ் மற்றும் திருக்குறள் மீது ஆர்வத்தை ஏற்படுத்துதல்.
11. நன்கு வாசிக்கும் திறமை உள்ள மாணவர்களைத் தேர்ந்தெடுத்து பயிற்சி தொடங்குதல்.
12. 133 அதிகாரங்களையும் கற்றுக் கொடுத்து கலைபண்பாட்டு துறையில் பதிவு செய்து அரசு வழங்கும் விருதுக்குப் பரிந்துரை செய்தல்.
13. மாணவர்களைத் தொடர்ச்சியாகக் கண்காணித்து அவர்களுக்கான கல்வி ஆலோசனைகளை வழங்குதல்.

## தினகரன்

### திருக்குறள் முற்றோதுதல் தொடக்க விழா



புதுவை தமிழ்ச்சங்கத்தில் நடந்த திருக்குறள் முற்றோதுதல் தொடக்க விழாவில் மாணவர்களுக்கு சான்றிதழ் வழங்கப்பட்டது.

புதுச்சேரி, ஆக. 28: புதுவை தமிழ்ச்சங்கம் சார்பில் விடுதலைநாள் விழா மற்றும் திருக்குறள் முற்றோதுதல் தொடக்க விழா நேற்று முன்தினம் நடந்தது. சங்க தலைவர் முத்து தலைமை தாங்கினார். செயலாளர் சீனு.மோகன்தாசு வரவேற்றார். துணை தலைவர்கள் ஆதிகேசவன், திருநாவுக்கரசு, பொருளாளர் அருள்செல்வம், துணை செயலாளர் தினகரன் ஆகியோர் முன்னிலை வகித்தனர். உலக திருக்குறள் முற்றோதுதல் இயக்கத்தின் திருக்குறள் பயிற்றுநர் சங்கீதா கண்ணன் 'இல்லற பெண்களுக்கு நல்லறம் காட்டும் வள்ளுவம்' என்ற தலைப்பில் சிறப்புரையாற்றினார். வீரமங்கை வேலுநாச்சியார் நாட்டிய நாடகத்தை விஜி (எ) வீரம்மாள் நடத்தினார். திருக்குறள் முற்றோதுதல் பயிற்சி பெற்ற அரசு பள்ளி மாணவர்களுக்கு சான்றிதழ் மற்றும் திருக்குறள் புத்தகம் வழங்கப்பட்டது. ஆட்சிக்குழு உறுப்பினர் ஆனந்தராசன் நன்றி கூறினார்.

## தினமணி

### புதுவைத் தமிழ்ச் சங்கத்தில் திருக்குறள் முற்றோதல் விழா



புதுச்சேரியில் சனிக்கிழமை நடைபெற்ற நிகழ்வில் சங்கீதா கண்ணனுக்கு நினைவுப் பரிசு வழங்கிய தமிழ்ச் சங்கத் தலைவர் வி.முத்து. உடன், செயலர் சீனு.மோகன்தாசு, துணைத் தலைவர்கள் ந.ஆதிகேசவன், ப.திருநாவுக்கரசு, பொருளாளர் மு.அருள் செல்வம் உள்ளிட்டோர்.

புதுச்சேரி, ஆக.27: புதுவைத் தமிழ்ச் சங்கத்தில் திருக்குறள் முற்றோதல் தொடக்க விழா சனிக்கிழமை மாலை நடைபெற்றது.

புதுவைத் தமிழ்ச்சங்கம் சார்பில் மாதந்தோறும் திருக்குறள் முற்றோதல் நிகழ்ச்சி நடைபெற்று வருகிறது. அதன்படி, சனிக்கிழமை நடைபெற்ற திருக்குறள் முற்றோதல் விழாவுக்கு தமிழ்ச் சங்கத் தலைவர் வி.முத்து தலைமை வகித்தார். இலக்கியச் சொற்பொழிவாளர் சங்கீதா கண்ணன் சிறப்புரையாற்றினார். நிகழ்வில், திருக்குறள் பாடப்பட்டது. சிறப்பு அழைப்பாளர் உள்ளிட்டோருக்கு புதுவைத் தமிழ்ச் சங்கத் தலைவர் வி.முத்து நினைவுப் பரிசு வழங்கினார்.

இதில், புதுவைத் தமிழ்ச் சங்கச் செயலர் சீனு.மோகன்தாசு, துணைத் தலைவர்கள் தமிழ்மாமனி ந.ஆதிகேசவன், ப.திருநாவுக்கரசு, பொருளாளர் மு.அருள் செல்வம், ஆட்சிக்குழு உறுப்பினர்கள் எம்.எஸ்.ராஜா, அ.சிவேந்திரன், கவிஞர் ர.ஆனந்தராசன் உள்ளிட்டோர் கலந்து கொண்டனர்.

## தினத் தந்தி

DAILY THANTHI

வெல்க தமிழ்



### தமிழ் சங்கத்தில் திருக்குறள் முற்றோதல் நிகழ்ச்சி

புதுச்சேரி, ஆக.28-

புதுச்சேரி வெங்கட்டா நகரில் உள்ள தமிழ் சங்கத்தில் விடுதலை நாள் விழா, திருக்குறள் முற்றோதல் தொடக்க விழா நடைபெற்றது. விழாவுக்கு புதுவை தமிழ் சங்க தலைவர் முத்து தலைமை தாங்கினார். துணை தலைவர்கள் ஆதிகேசவன், திருநாவுக்கரசு, பொருளாளர் அருள்செல்வம், துணைச் செயலாளர் தினகரன் ஆகியோர் முன்னிலை வகித்தனர்.

விழாவில் சிறப்பு விருந்தினராக உலக திருக்குறள் முற்றோதல் இயக்க பயிற்றுநர் சங்கீதா கண்ணன் கலந்துகொண்டு, 'இல்லற பெண்களுக்கு நல்லறம் காட்டும் வள்ளுவம்' என்ற தலைப்பில் சிறப்புரையாற்றினார். இதில் திருக்குறள் முற்றோதல் பயிற்சி பெற்ற அரசுப்பள்ளி மாணவிகளுக்கு சான்றிதழ் வழங்கப்பட்டது.

முன்னதாக செயலாளர் சீனு மோகன்தாஸ் வரவேற்றார். முடிவில் ஆட்சிக்குழு உறுப்பினர் ஆனந்தராசன் நன்றி கூறினார்.

## மாலை மலர்



### தமிழ்சங்கத்தில்

### திருக்குறள் முற்றோதல் நிகழ்ச்சி

புதுச்சேரி, ஆக. 27—

புதுச்சேரி தமிழ்ச்சங்கம் சார்பில் விடுதலை நாள் விழா மற்றும் திருக்குறள் முற்றோதல் தொடக்க விழா தமிழ்ச்சங்க கட்டிடத்தில் நடந்தது. விழாவில், தமிழ்ச் சங்கத்தின் பொதுச் செயலாளர் சீனு மோகன்தாஸ் வரவேற்றார். தலைவர் முத்து தலைமை தாங்கினார். துணை தலைவர்கள் ஆதிகேசவன், திருநாவுக்கரசு, பொருளாளர் அருள் செல்வன், துணை செயலாளர் தினகரன் முன்னிலை வகித்தனர். சங்கீதா கண்ணன், திருக்குறள் முற்றோதல் குறித்து சிறப்புரை ஆற்றினார். நிகழ்ச்சியில் கலந்து கொண்ட மாணவர்களுக்கு சான்றிதழ்கள் வழங்கப்பட்டது. நிகழ்ச்சியில் ஆட்சி மன்ற உறுப்பினர்கள் உசேன்,ராசா, சிவேந்திரன், சுரேஷ்குமார் உட்பட பலர் கலந்து கொண்டனர். ஆனந்தராசன் நன்றி கூறினார்.

### கருவடிக்குப்பம் சித்தானந்தா கோவில் அருகே

### அடையாளம் தெரியாத ஆண் பிணம்

புதுச்சேரி, ஆக.27—

கருவடிக்குப்பம் சித்தானந்தா கோவில் அருகே ... போனார். அதிக குடிபோதையிலோ அல்லது நோய் கொடுமையாலோ ...

## தினமலர்

உண்மையின் உரைகல்



புதுச்சேரி தமிழ்ச்சங்கம் சார்பில் விடுதலை நாள் விழா மற்றும் திருக்குறள் முற்றோதல் தொடக்க விழாவில் மாணவ மாணவியருக்கு சங்கத் தலைவர் முத்து சான்றிதழ் வழங்கினார். அருகில் செயலாளர் சீனு மோகன்தாஸ்.

### தமிழ்ச் சங்கத்தில் திருக்குறள் முற்றோதல்

புதுச்சேரி, ஆக. 27–

புதுச்சேரி தமிழ்ச்சங்கம் சார்பில் விடுதலை நாள் விழா மற்றும் திருக்குறள் முற்றோதல் தொடக்க விழா நடந்தது.

புதுச்சேரி வெங்கட்டா நகர் தமிழ்ச்சங்கத்தில் நேற்று மாலை நடந்த விழாவில், தமிழ்ச் சங்கத்தின் பொதுச் செயலாளர் சீனு மோகன்தாஸ் வரவேற்றார். தலைவர் முத்து தலைமை தாங்கினார்.

துணை தலைவர்கள் ஆதிகேசவன், திருநாவுக்கரசு, பொருளாளர் அருள் செல்வன், துணை செயலாளர் தினகரன் முன்னிலை வகித்தனர்.

சங்கீதா கண்ணன், திருக்குறள் முற்றோதல் குறித்து சிறப்புரை ஆற்றினார். நிகழ்ச்சியில் கலந்து கொண்ட மாணவர்களுக்கு சான்றிதழ்கள் வழங்கப்பட்டது.

நிகழ்ச்சியில் ஆட்சி மன்ற உறுப்பினர்கள் உசேன், ராசா, சிவேந்திரன், சுரேஷ்குமார் உட்பட பலர் கலந்து கொண்டனர்.

ஆனந்தராசன் நன்றி கூறினார்.

# திருக்குறள் போட்டிகள்..






**தமிழியக்கம் மற்றும் விஐடி போபால் பல்கலைக்கழகம்**
**இணைந்து நடத்தும்**
**திருக்குறள் ஒப்புவித்தல் போட்டி**

**திருவண்ணாமலை மாவட்ட அளவிலான திருக்குறள் ஒப்புவித்தல் போட்டி**

தேதி: 11.10.2023 (புதன் கிழமை)

நேரம்: காலை 9.30 மணி

இடம்: விஐடி பல்கலைக்கழகம், வேலூர்

பங்கேற்போர் தகுதி : **எட்டாம் வகுப்பு முதல் பத்தாம் வகுப்பு வரை**
**(அரசு பள்ளி மாணவர்கள் மட்டும்)**

**பரிசுகள்:**

**முதல் பரிசு : ரூபாய் 15,000/-**

**இரண்டாம் பரிசு: ரூபாய் 10,000/-**

**மூன்றாம் பரிசு: ரூபாய் 5,000/-**

**தலைப்பு: கொடுக்கப்பட்டுள்ள 10 அதிகாரங்கள்**

**விதிகள்**

1. ஒரு பள்ளிக்கு ஒரு மாணாக்கர் மட்டும்.
2. கொடுக்கப்பட்டுள்ள அதிகாரங்களில் இருந்து குறள் மற்றும் பொருள் கூறுதல்.
3. ஒருவருக்கு ஐந்து நிமிடங்கள் மட்டும் ஒதுக்கப்படும்.
4. போட்டியாளர்கள் காலை 9.30 மணிக்குள் அரங்கத்தில் இருக்க வேண்டும்.






5. மூன்று சுற்றுகள் கொண்ட போட்டி நடத்தப்படும்.

**முதல் சுற்று**
குறளின் தொடக்க வார்த்தை அல்லது இறுதி வார்த்தை கூறினால் முழு குறளையும் ஒப்புவிக்க வேண்டும்.

**இரண்டாம் சுற்று**
நடுவர்கள் கூறும் குறளுக்கு பொருள் கூற வேண்டும்.

**மூன்றாம் சுற்று**
நடுவர்கள் கூறும் பொருளுக்கு குறள் கூற வேண்டும்.

ஒரே மதிப்பெண் எடுக்கும் மாணவர்களுக்கு அடுத்த கட்ட சுற்று தேர்வுகள் நடத்தப்படும்.

**விதி**
குறளின் பொருளுக்கேற்ற சமூக நிகழ்வுகளை பொருத்தி சொல்ல வேண்டும்.

**மதிப்பீடுகள்**
நினைவாற்றல், உச்சரிப்பு, தெளிவு, உணர்ந்து கூறும் முறை, பொருள்.

பங்குபெறும் மாணவர்கள் அனைவருக்கும் பங்கேற்பு சான்றிதழ் வழங்கப்படும்.

காலை தேநீர், மதிய உணவு, மாலை தேநீர் வழங்கப்படும்.

போட்டியாளர்களுக்கு பயணப்படி வழங்கப்படும்.

போட்டியாளர்களுடன் ஆசிரியர்கள் வர அனுமதி உண்டு.

**"ஈரடிக்கூற்றில் உலகளந்த வள்ளுவன் வரிகள் கேட்போம்"**








**உங்களுக்கு கொடுக்கபட்டுள்ள அதிகாரங்கள்:**

1. திருக்குறள் அதிகாரம் 11 – செய்ந்நன்றியறிதல்
2. திருக்குறள் அதிகாரம் 17 – அழுக்காறாமை
3. திருக்குறள் அதிகாரம் 19 – புறங்கூறாமை
4. திருக்குறள் அதிகாரம் 35 – துறவு
5. திருக்குறள் அதிகாரம் 66- வினைத் தூய்மை
6. திருக்குறள் அதிகாரம் 69 – தூது
7. திருக்குறள் அதிகாரம் 82 – தீ நட்பு
8. திருக்குறள் அதிகாரம் 91- பெண்வழிச் சேறல்
9. திருக்குறள் அதிகாரம் 101- நன்றியில் செல்வம்
10. திருக்குறள் அதிகாரம் 106- இரவு




உங்கள் பிள்ளைச்செல்வங்களின் திருக்குறள் அறிவை அரங்கேற்ற சான் ஆண்டோனியோ தமிழ்ச் சங்கத்தின் ‘‘மொழியியல்’’ குழு வழங்கும் மற்றுமோர் அறிய மேடை ‘‘குறளுக்கு ஒரு டாலர்’’ திருக்குறள் போட்டி! வாய்ப்பை நழுவவிடாதீர்! விரைவீர்!

பதிவிற்கு கடைசி நாள் - Oct. 10th





நித்தமும் நெறிபிறழா வள்ளுவத்தைபிள்ளைகளின்
அகத்தினில் விதைத்திடவே
உள்ளத்தில் மாசின்மை கொண்டிட உலகத்தில்
அறமாம் வள்ளுவத்தை ஊன்றிடவே
**சான் ஆண்டோனியோ தமிழ்ச்சங்கத்தின்**
**மொழியியல் குழுவின்**
முத்தாய்ப்பான முயற்சியாய்

## திருக்குறள் போட்டி -2023
## குறளுக்கு ஒரு டாலர்




தொடர்பிற்கு

ஷீலா ரமணன்
+1 (210) 843-7620

பூர்ணிமா குப்புசாமி
+1 (210) 902-1381

பதிவிற்கு



**பதிவிற்கு கடைசி நாள்**
10 அக்டோபர் 2023

# திருக்குறள் தற்சார்பு

எங்கள் மாவட்டம்-எங்கள் பொறுப்பு, எங்கள் மாவட்டப் பயிற்சியாளர், எங்கள் மாவட்டத்தில் திருக்குறள் முற்றோதல் செய்த ஒருவருக்கு வேலை, எங்கள் மாவட்ட அறம்சார் புரவலர் திருக்குறளுக்கு முன்வருபவரை, அவரது வணிகத்தை நாங்கள் நாங்கள் முன்னிறுத்துவோம், எங்கள் மாவட்ட மாணவர்கள் பயன்பெறுகிறார்கள், எங்கள் மாவட்ட திருக்குறள் ஆளுமைகள் வழிகாட்டுகிறார்கள், எங்கள் மாவட்ட அரசு நிர்வாகத்துடன் இணைந்து அரசின் பரிசினைப் பெற அதிக மாணவர்கள் திருக்குறள் படிக்கிறார்கள், எங்கள் மாவட்டத்தில் படித்து வெளிநாடு சென்றவர்கள் எங்கள் மாவட்டத்தில் திருக்குறள் படித்தவர்களுக்கு கல்வி, வேலைவாய்ப்பு, வெளிநாட்டு மாணவர் பயணம் என்று பலவகையில் துணைநிற்கிறார்கள்.

**திருக்குறள் புரவலராக உங்கள் மாவட்டத்தில்பொறுப்பேற்க அழைக்கிறோம்..**

**ஏற்கனவே பொறுப்பேற்றுள்ள புரவலர்களுக்கு நன்றி...!! நன்றி.. !!**

உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம் நன்கொடை பெறுவதில்லை. செயல்பாடுகளை கண்டறிந்து அறம் சார்ந்த மனிதர்கள், நிறுவனங்கள் அந்தந்த மாவட்டத்திலிருந்து அவர்கள் சார்ந்த மாவட்டத்தின் புரவலர் பொறுப்பை ஏற்றுக்கொள்ளவேண்டும் என்று வலியுறுத்துகிறோம். மாணவர்களுக்கு சான்றிதழ் வழங்குதல், பரிசளித்தல், பகுதிநேர, முழுநேர திருக்குறள் முற்றோதல் பயிற்சியாளர்களுக்கு ஊக்கத்தொகையை நேரடியாக வழங்குதல் உள்ளிட்டவற்றிற்கு அந்தந்த மாவட்டத்திலிருந்து "திருக்குறள் புரவலர்கள்" தேவை.

| | | | |
|---|---|---|---|
| Ariyalur<br>அரியலூர்<br>Your Photo / Business Photo | Chengalpattu<br>செங்கல்பட்டு<br>**மணி பெரியகருப்பன்,**<br>Ohio, USA | Chennai<br>சென்னை<br>Your Photo / Business Photo | Coimbatore<br>கோயம்புத்தூர்<br>Your Photo / Business Photo |
| Cuddalore<br>கடலூர்<br>Your Photo / Business Photo | Dharmapuri<br>தர்மபுரி<br>Your Photo / Business Photo | Dindigul<br>திண்டுக்கல்<br>Your Photo / Business Photo | Erode<br>ஈரோடு<br>Your Photo / Business Photo |

| | | | |
|---|---|---|---|
| Kallakurichi<br>கள்ளக்குறிச்சி<br>Your Photo / Business Photo | Kanchipuram<br>காஞ்சிபுரம்<br>Your Photo / Business Photo | Kanyakumari<br>கன்னியாகுமரி<br>Your Photo / Business Photo | Karur<br>கரூர்<br>க.செங்குட்டுவன்<br>Valluvar Science and Management College |
| Krishnagiri<br>கிருஷ்ணகிரி<br>Your Photo / Business Photo | Madurai<br>மதுரை<br>Your Photo / Business Photo | Mayiladuthurai<br>மயிலாடுதுறை<br>JENIFER SWEETS & BAKERY<br>ஜெனீபர் பவுல்ராஜ் | Nagappattinam<br>நாகப்பட்டினம்<br>Your Photo / Business Photo |
| Namakkal<br>நாமக்கல்<br>Your Photo / Business Photo | Perambalur<br>பெரம்பலூர்<br>Your Photo / Business Photo | Pudukkottai<br>புதுக்கோட்டை<br>Your Photo / Business Photo | Ramanathapuram<br>இராமநாதபுரம்<br>Your Photo / Business Photo |
| Ranipet<br>இராணிப்பேட்டை<br>Your Photo / Business Photo | Salem<br>சேலம்<br>முனைவர்.<br>தங்கராசு பெரியசாமி | Sivagangai<br>சிவகங்கை<br>Your Photo / Business Photo | Tenkasi<br>தென்காசி<br>Your Photo / Business Photo |
| Thanjavur<br>தஞ்சாவூர்<br>Your Photo / Business Photo | The Nilgiris<br>நீலகிரி<br>Your Photo / Business Photo | Theni<br>தேனி<br>Your Photo / Business Photo | Thirupattur<br>திருப்பத்தூர்<br>Your Photo / Business Photo |

| | | | |
|---|---|---|---|
| Tiruvallur<br>திருவள்ளூர்<br>Your Photo / Business Photo | Tiruvannamalai<br>திருவண்ணாமலை<br>Your Photo / Business Photo | Tiruvarur<br>திருவாரூர்<br>மருத்துவர். விஜய் ஜானகிராமன்<br>USA | Vellore<br>வேலூர்<br>Your Photo / Business Photo |
| Viluppuram<br>விழுப்புரம்<br>Your Photo / Business Photo | Virudhunagar<br>விருதுநகர்<br>Your Photo / Business Photo | Pondicherry<br>புதுச்சேரி<br>தலைவர், புதுவைத் தமிழ்ச்சங்கம் | Karaikkal<br>காரைக்கால்<br>Your Photo / Business Photo |

# உலக மொழிகளில் திருக்குறள் மொழிபெயர்ப்புத் தொகுப்புத் திட்டம்

(சிகாகோவில் உலகத் தமிழ்மொழி அறக்கட்டளை என்ற ஒன்றை நிறுவி, தன் வாழ்நாள் முழுதும் திருக்குறள் குறித்து சிந்தித்த, பைபிள் அச்சகத்தில் மிக உயர்நத தாளில் திருக்குறளுக்கு இன்று உலகம் பயன்படுத்தும் ஒரு திருக்குறள் நூலை கொண்டவந்த முனைவர். அழகப்பா இராம்மோகன் அவரது நினைவாக இத்திட்டத்தை வலைத்தமிழ் மூன்று ஆண்டுகளுக்கு முன்பு தொடங்கி அமெரிக்காவை மையாமாகக் கொண்டு ஒரு குழு அமைத்து மொழிபெயர்ப்புகளை தொகுத்து வருகிறது. வள்ளுவர் குரல் குடும்பம் இத்திட்டத்தில் இணைந்து நூல்கள் திரட்டலை வேகப்படுத்தியுள்ளது. திட்டம் முடிந்து பொது பயன்பாட்டுக்கு வழங்கப்படும்)




**இதுவரை வெளிவந்த அனைத்து நூல்களும் அடையாளம் காணப்பட்டு அச்சு நூல்கள் சென்னைக்கு வரவழைக்கப்பட்டுள்ளது.**

**இத்திட்டத்தில் துணைநின்ற அனைவரது உதவிகளும், பங்களிப்பும் முறையாகப் பதிவுசெய்யப்படும்.**

**கீழ்காணும் மொழிகளில் மட்டுமே எங்களுக்கு இன்னும் மொழிபெயர்ப்புகள் அடையாளம் காணப்பட்டு நூல்கள் தேடப்பட்டு வருகிறது. மற்றவை தொகுப்பில் சேர்ந்துவிட்டது.**

| | | | | |
|---|---|---|---|---|
| 1. Burmeze | 5. Finnish | 9.Rajasthani | 13. Hungarian | 17. Garo |
| 2. Czech | 6. Italian(Italiano) | 10. Russian | 14. Assamese | 18. Armenian |
| 3. Dutch | 7. Konkani | 11. Spanish | 15. Brahu | 19. Tok pisin |
| 4. Fiji | 8. Polish | 12. Swedish | 16. Santhali | |

**தேடப்படும் மொழிபெயர்ப்பு நூல்களின் விவரங்களை வழங்க தொடர்புகொள்ளவும்**

E-Mail
**Thirukkural@ValaiTamil.com**

Whatsapp
**+1 5715996029 (USA)**